திருவருட்பிரகாச

# வள்ளலார்

 

# வாழ்வியல்



உயர்தவ

பிறையாறு சிதம்பர சுவாமிகள்

வள்ளலார் இளைஞர் மன்றம்
கோட்டைக்கரை
வடலூர்

# வள்ளலார் வாழ்வியல்



உயர்தவ
பிறையாறு சிதம்பர சுவாமிகள்

வள்ளலார் இளைஞர் மன்றம்
46-அ, கோட்டைக்கரை
வடலூர் - 607 303

# உரைத்திடக் கேளீர்

நான்முகர் வாழ்வைத் தெரிந்திட
நயந்தி ருப்போம்;
நாரணர் வாழ்வை அறிந்திட
நண்ணியிருப்போம்;
உருத்திரர் வாழ்வை உணர்ந்திட
உவந்திருப்போம்;
மயேச்சுரர் வாழ்வைப் புரிந்திட
விழைந்திருப்போம்;
சதாசிவர் வாழ்வை விளங்கிட
சார்ந்திருப்போம்;
ஆனாலும், இவ்வாறு
ஐந்தொழில் செய்பவர்களை
அருளாட்சியில் நிறுத்தும்
அருட்பிரகாச வள்ளலின்
அமுதனைய வாழ்வினை
அறிந்திட முயன்றோமா?
இந்நூல்,
அவர்களது வாழ்வின்
மலர்ச்சியினை முழுதும்
வடித்துத் தருகிறது.
இதனை எல்லோரும் படித்துப்
பரவசம் எய்திடுவோம்!

மன்ற ஆசிரியர் குழுவினர்






உ

இராமலிங்கர் துணை

# வள்ளலார் வாழ்வியல்

## சற்குரு தோத்திரம்

சீரார் கருணிகர் மரபில்
சிறந்து விளங்கும் அருள் விளக்கே!
செகம் உய்ந்திட வந்து அவரித்த
செல்வத் தருவே! சிற்பரமே!

ஏரார் பருவம் அறுமூன்றில்
இனியஅருள் பெற்று இன்பமலி
இன்சொல் மழைசெய்து எழுமுகிலே!
என் ஆருயிருக்கு ஒரு துணையே!

பாரார் பவம் நீத்து ஆருறு
பரப்பி ஒளிசெய் பகல் ஒளியே!
பகர்தற்கு அரிய மெய்நிலையே!
பற்றற்ற வருள் உற்றவனே!

பேரார் இராமலிங்கம் எனும்
பெருமானே! நின் திருப்புகழைப்
பேசி யாங்கள் மேன்மேலும்
பெருஞ் செல்வத்தைப் பெற அருளே!

## தமிழகச் சிறப்பு

பூவுலகின் கண்ணே உலகத்திற்குத் திலகம் போன்று விளங்குவது பரத கண்டம். பேராசை, பெருங்கோபம், பெருமோகம், பெருமதம், பெருலோபம், பேரழுக்காறு, பேரகங்காரம், பெருவயிரம், பெருமடம், பெருமயக்கம் முதலிய

பெருங்குற்றங்கள் பெரும்பாலும் விளைவதற்கு உரிமையாவன மற்றைய இடங்கள். அதுபொல் அல்லாது உண்மை அறிவு, உண்மை அன்பு, உண்மை இரக்கம் முதலிய பெருந்தகைமைப் பெருங்குணங்கள் பெரும்பாலும் விளைவதற்கு உரிமை உடையது ஞான பூமியாகிய தமிழகம்.

## தமிழ்மொழிச் சிறப்பு

மணிவாசகர், சம்பந்தர், நாவரையர், சுந்தரர் திருமூலர் முதலிய மகாபுருஷர்களால் தோத்திர சாத்திரங்களாக அருளிச் செய்யப்பட்டிருக்கும் திருவாசகம், தேவாரம் திருமந்திரம் என்னும் பரமார்த்த ரகசியங்களை உடையது தமிழ்.

ஓதுவதற்கும் பொருள் கொள்ளுவதற்கும் மிகவும் கடினமாக உள்ள ஆரியம், மகாராட்டிரம், ஆந்திரம், என்ற பற்பல பாஷைகள் போல் ஆகாதது தமிழ். பெரும்பாலும் கற்பதற்கு எண்ணளவு சுருக்கமாகவும், ஒலி இலேசாயும், கூட்டம் என்னும் சந்தி அதிசுலபமாய் எழுதவும், கவி செய்யவும், மிக நேர்மையானது தமிழ். அட்சர ஆரவாரம், சொல் ஆடம்பரம், போதுபோக்கு, பெருமறைப்பு முதலிய பெண் அலங்காரங்கள் இல்லாதது தமிழ். எப்பாஷையின் சந்தசுகளையும் தன் பாஷையுள் அடக்கி ஆளுகையால் ஆண் தன்மை உடையதாகி விளங்குவது செந்தமிழ்.

## சிதம்பரச் சிறப்பு

அச்செந்தமிழ் நாட்டில் ஒப்பற்ற சிறப்புடன் விளங்குவது சோழ நாடு; காவிரி என்னும் பொன்னி நதியால் நீர்வளம், நிலவளம், குடிவளம் எங்கும் சிறந்து விளங்குவது சோழ வளநாடு. சோழ வளநாடு சோறுடைத்து என்று பேசப்படும் சிறப்பு வாய்ந்தது. அச் சோழ வளநாட்டில் சிறந்தது தில்லைச் சிதம்பரம்.

## சிற்றம்பலச் சிறப்பு

சிதம்பரம் காவிரியின் வடபால் உள்ளது. பஞ்ச பூதத் தலங்களில் சிறந்து விளங்குவது. ஆகாயத் தலமாய் நால்வராலும் போற்றப் பெற்றது. திருமந்திரம் அருளிய திருமூலர்

ஆனந்தத்தாண்டவம் கண்டு அமர்ந்து விளங்குவது. பதஞ்சலி வியாக்கிர பாதர்களாகிய முனிவர்கள் கண்டு மகிழ வீர தாண்டவம் புரிந்து, மகா மாயையாகிய திவ்லீ மாகாளியை வென்று சிறையிட்டு அடக்கியது. மெய்யுணர்ந்த வாதவூர் மலேயைச் சுத்த வெளியாக்கிக் கலந்து கொண்டது. நந்தனர் என்னும் பேரறிவில் சிறந்த பெரியாரையும் அவ்வண்ணமே ஆக்கியது.

சேக்கிழார் என்பவர் தெய்வப் புலவர். அவர் திருவருள் இன்பத்தை அங்கைக் கனியில் பெற்ற பெரியரையும் அத் திருவருளேயும் வாச்சிய லட்சியமாகக் கொண்ட பெரியபுரா ணத்தை வெளிப்படுத்த எண்ணினர். அது எங்ஙனம் கை கூடும் என்று ஐயுற்று அழுங்கிய உள்ளத்தோடு அருட் பொதுவின்கண் போந்து, பணிந்து, பழிச்சித், திருவருட்பெரு மையைச் சிந்தித்து நின்ருர். அவருக்கு எல்லாம்வல்ல இறை வன் சத்தார்த்த பிரபஞ்ச காரணமாய்ச் சிற்சத்தி பர விந்துவில் பதிதலால் நாதமாத்திரத்தின் ''உலகெலாம்'' என்னும் திருவருட்குரிய லட்சிய மெய்மொழி வெளிப்படுத்தி ஞர். அத்தகைய தெய்வத் தன்மை பொருந்திய இடம் சிதம்பரம்.

## பூர்வஞான சிதம்பரம்

ஷடாந்த அனுபவ சாத்தியர்களும் அவ்வழிக்கண் நின்ற சாதகர்களும் அந்தரானுபவத் திட்டாந்தமாக உபாசிக்க விளங்குகின்ற சிதம்பர இரகசியத்தை, உடையது சிதம்பரம்.

அது புருவ மத்திய சம்பந்தம் உடையதால் பூர்வஞான சிதம்பரம் எனப்பட்டது. நெற்றியின் நடுக்கண் எங்கும் கண் ணுகக் காணும் கதி காரணமாகக் கடவுள் விளக்கம் விளங்கும் இடம் அது. ஆன்மாகாயம்,மகாமேரு, பொற்சபை முதலாக வுள்ள அநேக சிறப்புப் பெயரும் பெற்றிருப்பது அது. இவ் வுலகில் இருதய கமலம் போல் சர்வ தெய்வீகந் தலங்களும் தோன்றி விளங்க, விளக்கும் தனிப்பெரும் தலமாகிப் பெரிய கோயில் என்னும் சிறப்பும் பெற்று விளங்குவது அத் தெய்வீகத் திருத்தலம்.

## பெருமான் உதயம்

அத்தலத்திற்கு வடமேற்கில் காத தூரத்தில் மருதூர் என்னும் திருப்பதி விளங்குகின்றது. கலியுகம் 4925, சுபானு வருடம் புரட்டாசி மாதம், 21-ஆம் தேதி (5—10—1823) ஞாயிற்றுக்கிழமை பூர்வ பக்கம் துவிதியை திதி சித்திரை நட்சத்திரம் நாலாம் பாதம், துலாராசி கூடிய சுபதினத்தில் ஷடாந்த சமரச சுத்த சன்மார்க்க ஞானசிரியராய் விளங்க வேண்டிய ஓர் ஆண்மகவு, அவ்வூரில் தெய்வத் திருமகள் சின்னம்மையார் மணிவயிற்றில் உதயம் செய்தது.

## நாமம் சூட்டப்பெறல்

உருநாமம்இராமலிங்கம்எனக்கொண்டார்ஓங்கருளால்
குருநாம மந்திரமாக் கொண்டுய்ந்தார் உயநினைந்தார்
பெருநாம மந்திரத்தைப் பெற்றி அறியார் எல்லாம்
திருநாமம் இது பிள்ளைத் திருநாமம் என்பாரே.

என்று தொழுவூர் வேலாயுதனார் திருஅருட்பா வரலாற்றில் குறித்தவாறு அத் தெய்வக் குழந்தை ஓங்கு அருளால் **இராமலிங்கம்** என்னும் திருநாமம் சூட்டப் பெற்று வளர்ந்தருளியது.

## வெளியாகக் கண்டருளல்

குழந்தை பிறந்த ஐந்தாவது மாதம், இராமையாக் குடும்பத்துடன் சிதம்பரம் சென்றார். குழந்தையைக் கையில் ஏந்தியவண்ணம் நடராஜர்தரிசனம் செய்தார். கையில் இருந்த குழந்தையோ, திரை தூக்கத் தரிசனம் செய்யும் போது கண் இமை கொட்டாது கலகலவென்று,

தாய்முதலோ ரொடுசிறு பருவத்தில் தில்லைத்
தலத்திடையே திரைதூக்கத் தரிசித்த போது
வேய்வகைமேல் காட்டாதே என் தனக்கே எல்லாம்
வெளியாகக் காட்டிய என் மெய்உறவாம் பொருளே;
காய்வகைஇல் லாதுஉளத்தே கனிந்தநறுங் கனியே;
கனவிடத்தும் நனவிடத்தும்எனைப்பிரியாக்களிப்பே;
தூய்வகையோர் போற்றமணி மன்றில்நடம் புரியும்
சோதிநடத் தரசே;என் சொல்லும் அணிந்தருளே.

என்று பெருமான் கூறியவாறு, அக்குழந்தை அப்பருவத் திலேயே எல்லாம் வெளியாகத் தில்லையில் கண்டு உவகை பூத்த உள்ளத்துடன் நகையாடியது.

## அருட்குருவிடம் கல்வி பயிலல்

பின் பிள்ளைப்பெருமானின் தந்தையார் இராமையா உலக வாழ்வை நீத்தார். அதனால் குடும்பம் சென்னை சென்றது. அங்குச் சபாபதியார் தன் இளைய தம்பியாகிய இராமலிங்கப் பெருமானுக்கு ஐந்தாம் பிராயத்தில் வித்தியாப் பியாசம் செய்வித்தனர். பின்பு சிலகாலம் பொறுத்து காஞ்சிபுரம் சபாபதியாரிடம் அழைத்துச் சென்று கல்வி அறிவு வளர்க்கும்படி வேண்டினர்.

நாலைந்து நாள் பாடம் சொல்லப்பட்டது. அப்படிச் சொல்லி வரும்போதே நமது இளையபெருமான் சென்னை கந்த கோட்டத்திற்குச் சென்றார்கள்.

கல்விஎலாம் கற்பித்தாய்; நின்பால் நேயம்
 காணவைத்தாய்; இவ்வுலகம் கானல் என்றே
ஒல்லும்வகை அறிவித்தாய்; உள்ளே நின்று என்
 உடையானே; நின்னருளும் உதவு கின்றாய்!
இல்லைஎனப் பிறர்பால்சென்று இரவா வண்ணம்
 ஏற்றம் அளித்தாய்; இரக்கம் என்னே!என்னே!
செல்வஅருள் குருவாகி நாயி னேனைச்
 சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவே!

என்பன போன்ற அருட்பாக்களைப் பாடியருளினார்கள்.

நமக்கு ஞான தேசிகனாகிய முருகப்பெருமான் ''இல்லை எனப் பிறர்பால் சென்று இரவாமல்'' தன்னுள் நின்று அருள் புரியும் தன்மையை விளக்கி ஏற்றம் உற்றுத் திகழ்ந் தார்கள். அம்மாண்பு அறிந்த ஆசிரியர் சபாபதியார், பிள்ளைப் பெருமானுக்குச் சாக்குப் போக்குகள் சொல்லிக் கல்வி கற்பிக்கக் காலதாமதம் செய்தனர்.

## தமையனார் உத்தரவு

ஆனால் இளைய பெருமானே அந்தரங்க தெய்வ வழிபாட் டில் திளைத்து உலவினார்கள். தமையனாரோ அத்தன்மை உண

ராது இலௌகீக முயற்சியில் பெரிதும் உழன்று கொண்டிருந்தார். தன் தம்பி கல்வி பயிலாது வீணில் காலம் கழிப்பதாகக் கருதினுர்; மனம் வருந்தினுர். அதனுல் தன் மனைவியிடம் இராமலிங்கர்க்கு வீட்டில் உணவு வழங்குதலை நிறுத்தும்படி உத்தரவிட்டார்.

### அன்பிற்குக் கட்டுப்படல்

நாளடைவில், அண்ணனின் அதிகாரத்திற்கு உட்படாத பெருமான் அண்ணியின் அன்பிற்குக் கட்டுண்டார்கள். வீட்டில் இருந்து கொண்டே கல்வி பயின்றுவர விருப்பம் கொண்டார்கள். அவர்கள் விருப்பின்படி தனியிடம் ஒன்று கேட்டுப் பெற்ருர்கள். நாளும் அவ்விடத்தில் புகுந்து தமது ஞானதேசிகனைக் கருதிக் கலந்து ஞான ஆனந்த போகம் உற்ருர்கள்.

### ஒன்பதாம் வயதில்

ஆண்டாறுமூன்ருண்டில்ஆண்டுகொண்டஅருட்கடலே
ஆறெடுமூன்ருண்டுஆவதிலேமுன்னென்னை ஆண்டாய்

என்னும் திருவருட்பாப் பாடல்களால் தன்னை ஞானதேசிகன் ஒன்பதாவது வயதில் ஆட்கொண்டதாகக் குறிக்கின்ருர்கள்.

### ஓதாது உணர்தல்

சுற்றது மற்றவ்வழி மாசூதது என்று எண்ணத்
தொண்டரெலாங் கற்கின்ருர் பண்டுமின்றும் காணர்
எல்ததும்பு மணிமன்றில் இன்பநடம் புரியும்
என்னுடைய துரையே! நான்நின்னுடையஅருளால்
கற்றதுநின் இடத்தே;பின் கேட்டதுநின் இடத்தே;
கண்டதுநின் இடத்தே;உட் கொண்டதுநின் இடத்தே
பெற்றதுநின் இடத்தே;இன் புற்றதுநின் இடத்தே
பெரியதவம் புரிந்தேன்; என்பெற்றி அதிசயமே!

ஏடுஅகத்தே எழுதாத மறைகள் எலாம் களித்தே
என்உளத்தே எழுதுவித்த என்உரிமைப் பதியே!

ஓதி உணர்ந்தவர் எல்லாம் எனைக்கேட்க எனைத்தான்
ஓதாமே உணர்ந்துணர்வாம் உருவுறச் செய்யுறவே!

ஓதாது உணர்ந்திட ஒளியளித்து எனக்கே
ஆதார மாகிய அருட்பெருஞ் ஜோதி!

என்று பல இடங்களில் வள்ளல் தாம் ஓதாமலே கற்ற தரம் பற்றி விரித்து அருள்கின்றார்கள்.

## முற்றும் உணர்தல்

ஆதலின் அருள் முன் இடமாகச் சுத்த சிவ நோக்கால் முற்றும் உணர்ந்தவர்களாய். அவ்வுணர்ச்சி வடிவாகித் தெய் வீகத் தரத்தில் திகழ்ந்தார்கள். சகசநிலை உடையவர்களாய் சென்னை கந்த கோட்டத்திற்குச் சென்று முருகனை வழிபட்டுத் தோத்திரப் பாமாலை சூட்டி வரலானார்கள்.

## உலகுய்ய உதித்தருளல்

நம் பெருமான் ஈரமும் அன்பும் தன் இன்னுயிராகக் கொண்டவர்கள்; நாடு நடு நாட்டத்தில் உற்ற அனுபவ ஞா னம் உடையவர்கள்; உலகை உய்விக்க என்றே வருவிக்கப் பட்டவர்கள். ஆதலின்

திணிகாண் உலகை அழையேனோ?
சேர்ந்து அவ்வீட்டில் நுழையேனோ?

என்று கருணை வடிவாகிய தன் அருளியலை வெளிப்படுத்திய வர்கள். ஒப்பற்ற பேரின்பப் பெருவாழ்வாம் வீட்டுக்குள் உல கர் அனைவரையும் ஒன்று சேரச் சேர்ந்து நுழைதல் வேண்டும் எனவிரும்பி அவ்வுண்மைவெளிப்படத்திகழ்ந்து நின்றவர்கள்.

## இதுவே தருணமாக நேர்ந்தது

புராணப் பிரசங்கம் செய்து இல்லறம் நடத்தி வந்தார் தமையனார். அவருடன் இளையபெருமானும் சென்று கையேடு வாசித்து வரத் தொடங்கினார்கள். நம் பெருமான் கையேடு வாசிக்கும் முறையே நுண்பொருள் காட்டி, மெய் உணர்வு ஊட்டும் தகையினதாய் இருப்பதைச் சபையார் அறிந்துவந் தனர். ஓர்நாள் பிரசங்கம் செய்யும் அளவிற்குத் தமையனா ருக்குச் சரீர ஒற்றுமை இல்லை. அதனால் தம்பியை அனுப்பி நிலைமையைச் சொல்லிவர விடுத்தனர். அவர் கட்டளைப்படி சென்னை சோமு என்பவர் இல்லத்திற்குச் சென்று நிலைமை யை எடுத்துரைத்தார்கள் இளைய பெருமான்.

அப்போது கூடியிருந்த அன்பர்கள் ''தம்பி! நாங்கள் பல இடங்களிலிருந்து வந்து விட்டோம்! சிறிது நேரமாயினும்

நிம்மதியாக இருந்து செல்வோம். தாங்கள் கையேடு வாசிப்பதே மெய்யுணர்வு ஊட்டுவதாக இருப்பதால் தெரிந்த வகையில் சொல்லுங்கள்-'' என்று வற்புறுத்தினர்.

## மலர்வாய் திறந்து மறையமுதம் பொழிந்தது

நம்பெருமானுே, மொழித்திறன் தெரிந்து, முடிபு முற்றிலும் உணர்ந்த சிவஞானிகள். இவ்வுலகிற்குச் சத்திய ஞான நெறியை உணர்த்தி, ஷடாந்த சமரச சுத்த சன்மார்க்க நிலையினின்று என்றும் தடைபடாத பேரின்ப சித்திப் பெரு வாழ்வைப் பெறுவிக்கும் பொருட்டே தோன்றியவர்கள். அவ் வுண்மைகளை எடுத்து ஓத, அதுவே தருணமாக நேர்ந்ததனை உணர்ந்திட்டார்கள்.

திருஅருள் இன்பத்தை அங்கைக் கனியில் பெற்ற பெரியாரையும், அத் திருவருளையும், வாச்சிய இலட்சியமாகக் கொண்டது, பெரியபுராணம். அதில், தமது சிவஞான தேசிகராகிய ஆளுடைய பிள்ளையாரின் அருட் சரித்திரமே, விரிவுரை செய்யவேண்டிய பகுதியாகத் திருவருள் கூட்டி வைக்க நேர்ந்ததனையும் உள்ளத்து ஓர்ந்திட்டார்கள்.

அன்பர்களைத் தம் தெருள் நிறைந்த இன்ப நிலை வளர்க்கின்ற அருட்கண்ணுல் நோக்கிட்டார்கள்.

சிதையா ஞானப்பொருள் நிறைந்த மறைஅமுதம் பொழிகின்ற மலர்வாய் மலர்ந்திட்டார்கள். ஷடாந்த சமரச இலட்சியப் பொருள் எல்லையை உடையதும் ஆகிய மெய்ம்மொழியினைத் தெய்வீகத் தரத்தில் திகழ்ந்து முதன்முதல் விரிக்கலுற்ருர்கள். இரவு 12 மணி வரையில் பிரசங்கித்தார்கள். ஒரு பாட்டும் முடித்திலர். ஆதலின் இளையபெருமானே, புராணத்தைத் தொடர்ந்து பூர்த்தி செய்யவேண்டும் என்று பிரார்த்தித்தனர். அதன்பின் தம்பியின் தகைமை உணர்ந்து தன் செயற்கு வருந்திய, தமையனுர், இளையவர் முருகவேளே எனப்போற்றி உபசரித்து வருவாராயினர்.

## திரு ஒற்றியூர்

கல்மனம் உடையாரையும் கசிந்து உருகச் செய்வது. புலபட விரிந்த மனம் குவியத் தந்திரம் தேடுவோருக்கு

அங்கையில் கனிபோல சித்த சாந்தம் பிறப்பிப்பது. தவ நெறி தழைப்பது. பவநெறி காய்ப்பது. அருட்பழம் பழுப்பது. நந்தி ஆச்சிரமம் என்னும் நாமம் பெற்றது.

வெற்றியூர் என்ன வினையேன் வினைதவிர்த்த
ஒற்றியூர் மேவியஎன் உள்அன்பே - தெற்றிகளில்
பொங்கு மணிக்கால்கள் பொலஞ்செய் திருஒற்றிநகர்
தங்கும் சிவபோக சாரமே - புங்கவர்கள்
சேர்ந்து வலங்கொள்ளும் திருஒற்றியூர்க் கோயில்
சார்ந்து மகிழ்அமுத சாரமே - தேர்ந்துஉலகர்
போற்றும் திருஒற்றிப் பூங்கோயிற் குள்பெரியோர்
சாற்றும் புகழ்வேத சாரமே!

என்று நம் பெருமானால் புகழப்பெற்ற அத்தகைய பெருமைகளை உடையது, திவ்விய திருப்பதியாகிய திருவொற்றியூர்.

## திருவொற்றியூர் வழிபாடு

அத்திரு ஒற்றியூருக்குச் சென்று ஒற்றிப் பரமனை வழிபட்டு அருட்பாடல்கள் பாடும் வழக்கம் நம் பெருமான்பால் நிகழ ஆரம்பித்தது. அவ்வாறு பாடி வழிபடும் காலத்தில் இகபரத்தும் ஏகதேசத்தும் இச்சையற்ற நிலையில் நின்றிட்டார்கள். அதனால் பெரியர் என்று பலரும் பெருமான்பால், அதிசயித்த உணர்வினராய் அன்புடன் பழகி வந்தனர்.

## செந்நாப் புலவர்

சென்னையிலும் ஒற்றியிலும் அவர்களால் பாடப்பட்ட பாடல்கள் யாவும், உலகினர்க்கு சாத்திரங்களிலுள்ள ஐயம், திரிபு, மயக்கங்களைக் களைபவை. உண்மை ஒழுக்கம், உண்மை இரக்கம், உண்மை அன்பு பொருந்த நிற்பவை. தொண்டு அடைந்து பாடும் திறம் தெரிப்பவை. நாடும் தரம் விரிப்பவை. இன்பம் கூடும் வகை புரியும் பண்பினதாக அமைந்துள்ளவை.

அதனால் அதி தீவிரமாகவும், செம்பாகமாகவும் பாடும் செந்நாப் புலவர் என்றும், அடக்கமே பொருள் எனத்தேர்ந்த அருளாளர் என்றும், பலரும் பெருமான்பால் அன்புடன் பழகி வந்தனர்.

## உயிர் இரக்க உணர்வு

அந்நாளில், பெருமான் ஞானதீபம் ஒத்து இலகும் தன் திருமேனியை மூடிக்கொண்டு, பிறர்க்குத் தம்பால் இச்சை செல்லவொட்டாது, முக்காடு இட்டு மறைத்தத் திருமேனிய ராய் வீதிகளில் ஓரமாய்ச் செல்வார்கள். திண்ணையிலாவது, உயர்ந்த ஆசனத்திலாவது, காலின் மேல் கால் போட்டாவது உட்கார்ந்து வீண்வழக்குப் பேசஒருவருடனும்ஒருப்படார்கள். உயிர் இரக்கமும் ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமையும் கொண்டு ஒழுகுவார்கள்.

## தொழுவூர்ப் பெருந்தகை

அக்காலம் சென்னையில் இருந்தவர் வித்துவான் தொழு வூர் வேலாயுதனார். அவர் கடின நடையில் நூறு பாட்டுகள் சிலேடையாகப் பாடினார். பழைய ஏட்டிலுள்ள சங்கப்பாடல் என்று நமது பெருமானிடம் கொண்டுவந்து காட்டினார். வேலாயுதனாரை ஆட்கொள்ள நம்பெருமான் எண்ணினார் கள். "இது பொருள் இலக்கணம் தேருக் கற்றுக்குட்டிப் பாட்டு; சங்கப் பாட்டு ஆயின் இவ்வளவு குற்றம் இராது" என்று கருணையினால் உள்ளுணர்வு எய்த உரையாடினார்கள்.

## தலைமை மாணக்கர்

அதுவரை நேரில் பழகாதிருந்தவர் தொழுவூரார்.

காணுவார் இருகண்களும் மனமும்
கரைந்து தங்களைக் காண் இலராக
மாணுலாம் திருவருளினால் விழுங்கிவைத்து
மாசுஅறக் கழுவி இன்பு ஊட்டும்
தாணு ஆகிய சரண வாரிசம் என்
தலைக்கு மாமுடி ஆக்கிய அமல
வேணின் ஓம்! சிவ சண்முக சிவ ஓம்!
இராமலிங்க ஓம்! சிவாய சற்குரு ஓம்!

என்று அவர் பாடியதற்கு இணங்க சற்குருநாதரின் சால்பு உணர்ந்து சிவஞான தேசிகராம் நம்பெருமானுக்குத் தன்னை முற்றிலும் அடைக்கலம் கொள்ளக் கொடுத்திட்டார். தான் அற்று இருந்தார். அவர் பக்குவநிலையை உணர்ந்தார்கள்.

பெருமான். " நம் பிள்ளை ந ம க் கு க் கிடைத்தாய்" என்று கைப் பிடித்தார்கள். மாணுக்கருள் தலை நிற்பவராக விளங்கச் செய்தார்கள். தீந்தமிழ், ஆரியம் என்னும் இரு பாஷைகளி லும் உள்ள சகல கலைகளிலும் வல்லவராய்க் கல்வித்துறை ஏ றி ய நாவலராய் விளங்கச் செய்தார்கள். குமரவேள் உபா சனை தெரிவித்து வழிபடச் செய்தார்கள்.

## அருளின் ஆற்றல்

ஆதலின்,

மீதானத்து உயர்பள்ளி மேவ எமை வைக்கும் எங்கள்
மேதாவைப் பள்ளி விழைந்து அருளிற்று என்று
உரைப்பது எவன்?
ஓதாமே எமை எல்லாம் உணர்த்தும் உருவெளியை;

என்று தமக்கு ஞானதேசிகன் அகத்தும் புறத்தும் ஓதாது உணர்த்தி வருகின்றனர் என்றும், உண்மையைத் தேர்ந்து தெளியச் செய்கின்றனர் என்றும், அருளின் ஆற்றலையும் தான் அவ் அருளாளரின் மெய் உரைகளை உய்த்து உணரும் தரமும் பாக்கியமும் குறித்து வெளிப்படையாகத் தோத்தரித்துள்ளார் வேலாயுதனூர்.

## உபய கலாநிதிப் பெரும்புலவர்

தொழுவூரார், உபய கலாநிதிப் பெரும் புலவர் என்னும் பட்டமும் நமது பெருமானல் சூட்டப் பெற்றூர். தம்பால் குழுமியுள்ள மக்களை நோக்கி, "நீவிர் நம்பால் நே ரி ல் கேட்டு அறிய இயலாத காலத்து, ஐயம் எழின், மனுஷ தரத் தில் கூடிய வரையில் முதலியாரப்பா சொல்லுவார்கள். கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்" என்று பெருமான் குறிப் பிடக் கூடிய பெருந்தகைமை உடையராய் விளங்கினர்.

## அருள் ஆசிரியர்

பின்னர் தமிழ் நாட்டில் எங்கும் உள்ள பண்டிதர்களும், ஆச்சாரியார்களும், தம்பிரான் முதலியோரும் நம் பெருமான் பெருமையைக் கேள்வியுற்றனர். அவர்களது மாணவராகித் தங்கட்கு ஏற்படும் ஐயங்களைக் கேட்டுத் தெளிந்தனர்.

## திருமணம்

திலகவாள் நுதலார் தமைக்கன விடத்தும்
சிறிதும்நான் விழைந்திலேன் : இந்த
உலக வாழ்வதில் ஓர் அணுத்துணை எனினும்
உவப்பிலேன்; உலகுறு மாயைக்
கலக வாதனை தீர்காலம் என்று உறுமோ?
கடவுளே; எனத் துயர்ந்து இருந்தேன்;
அலகு இலாத் திறலோய்! நீ அறிந்தது; நான்
அடிக்கடி உரைப்பது என் நினக்கே?

என்றருளினர்கள் நமது பெருமான். அவ்வாறே சுத்த சன்மார்க்க லட்சிய அனுபவ விருப்பம் உடையார்க்கு, கனவினும் பெண்ணாசை, நனவினும் மண்ணாசை, சுழுத்தியினும் பொன்னாசை முதலிய மூன்றும் கூடா என்று ஓர்ந்து ஒழுகியவர்கள் நம் பெருமான்.

ஒன்று எனக் காணும் உணர்ச்சி உற்று, என்றும் இங்கு இறவா இயற்கை உற்று, இயல் அருள் சித்திகள்ஒன்றநின்று அனைத்தும் தம்வசத்து உறப்பெற்று, உள்ளவாறுஇந்தஉலகு எலாம் களிப்பு உற்று ஓங்கவே புரிந்து உளம்மகிழ்தல்என்றோ என்று இரங்கியவர்கள் நம்பெருமான்.

கருணை ஒன்றே வடிவு ஆகி எவ்வுயிரும்
தம்முயிர்போல் கண்டு ஞானத்
தெருள்நெறியில் சுத்தசிவ சன்மார்க்கப்
பெருநீதி செலுத்தி,

வாழ்ந்து வந்தவர்கள் வள்ளல். ஆதலின்,இம்மையினோடுஅம்மையிலும் எய்துகின்ற இன்பம் எனைத்தொன்றும் வேண்டாத இயற்கை உண்மை நிலைக்கண் திரு அருள் விளங்க விளங்கி நின்றிட்டார்கள்.

உலகியல் கானத்து உழல்கின்ற தாயாரும், தமையன்மாரும், தமக்கையரும், நட்பினரும் நம்பெருமானுக்குத் திருமணம் நிகழ்த்தி இம்மைப்பயன் அடைவித்துக் கண்டு களிக்கும் ஆர்வம் பெரிதும் உடையராயினர். எனவே பலகாலும் வற்புறுத்தினர். பெருமான் சம்மதம் பெருது சில ஆண்டுகள் போயின. மீண்டும் சிவயோகியாரைக் கொண்டு வற்புறுத்தினர்.

தம் பற்று அற்ற நிலை தெளிவு படத் தோன்றுதற்கு ஏதுவாக ஒருவாறு சம்மதித்தனர். மணம் செய்வித்து மகிழ்ந்தனர் சுற்றத்தார். பின் நமது வள்ளல்,

இடை அருப் பேரன்பே இன் உருவாய் நின்றுருகித்
தடைஉருத்தண்அருளில்தான்கலந்து ஆனந்தம்எனும்
நடையருப் பெரும்போகப்பெருவெள்ளத்தழுந்திஉலகு
இடைஅருப் பெருமாயை எற்றி ஒளி எய்தினரே!

என்றவாறு அருள் ஒளி தாஞய் மாயை இருள் அற்று அகல ஞான பானுவாய் விளங்கி அருளினர்கள்.

## அருள் அம்மைத் திருவமுது அளித்தமை

சன்மார்க்கம் என்பது அறிவு நூல் முடிவான நான்காவது மார்க்கம் என்ருர்கள் நம்பெருமான். நான்காவன தாசமார்க்கம், சத்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்பன. நான்காவது மார்க்கம் எய்துமுன் மற்றவை முறையே கைவரப்பெறல் வேண்டும் என்ருர்கள்.

அவ்வாறு தாம் எய்திய முறையை,

அடியன் ஆக்கிப் பிள்ளை யாக்கி நேயன் ஆக்கியே
அடிகள் ஆக்கிக் கொண்டாய் என்னை அவலம் நீக்கியே

என விளக்கி அருள்கின்ருர்கள்.

மிகவே துயர்க்கடல் வீழ்ந்தேனை நீ கை விடுதல்அருள்
தகவே, எனக்கு நற்ருயே! அகில சராசரமும்
சுகவேலை மூழ்கத் திருஒற்றி ஊரிடம் துன்னிப்பெற்ற
மகவே எனப் புரக்கின்ருேய் வடிவுடை மாணிக்கமே!

என்று அருளியவாறு தாம் தெய்வீகத் தரத்தில் பிள்ளையாக்கப் பட்டது ஒற்றிப் பதியில் தான் என்கின்ருர்கள்.

அகில சராசரமும் பொதுவில் பிள்ளைகளே என்றும், அவர்களெல்லாம் சுக சமுத்திரத்தில் ஆழும்படிச் செய்யவே நின்னையாம் திரு ஒற்றியூரில் திகழ்ந்து பெற்ருேம் என்றும், அம்மைப் பேராதரவுடன் தம்மைக் காப்பாற்றுவதாக வெளிப்படுத்தி உள்ளார்கள்.

பரையாம் செவிலித் தாயாலும், மற்றைய மாயா சக்திகளாலும் தோன்றி வளர்ந்து காப்பாற்றப்படும் சராசர உயிர்

கள் போன்றவர்கள் அல்லர் நம்பெருமான். அருள்சத்திபால் தோன்றி வளர்ந்து விளங்கும் பெருமான் என்பது அறியப்படு வதாக உள்ளது.ஆதலின்ஒற்றியூரிடம்துன்னிப்பெற்ற மகவே எனப் புரக்கின்ருேய் என்று அருளினுர்கள்.

அதற்குச் சான்ருக, ஒருநாள் செல்வப் பிள்ளேயாகிய நம் வள்ளல் வடிவாம்பிகையினேத் தரிசித்தார்கள். அதனுல் காலம் தாழ்ந்து வீடு வந்தார்கள். யாரையும் எழுப்ப விருப்பம் இன்றிப் பசியோடு திண்ணேயில் படுத்தார்கள். அதனே அருட் சத்திச் சிறிதும் சகியாதவளாய்த் தன் அருள்கரத்துத் தாமரை இலேயில் வெண்பொங்கல் ஏந்தி வந்து தமக்கைபோல் தோன்றி, அளித்து, உண்பித்து மறைந்தருளினுள். அ ந் த ப் பேரருள் நிகழ்ச்சியை,

தெற்றியிலே நான்பசித்துப் படுத்து இளேத்த தருணம்
திருவமுது ஓர் திருக்கரத்தே திகழ்வள்ளத்து எடுத்தே
ஒற்றியில்போய்பசித்தனேயோஎன்றெனேஅங்கெழுப்பி
உவந்து கொடுத்தருளிய என்உயிர்க்கினிதாம் தாயே

அன்று ஒருநாள் நம்பசி கண்டுஅந்தோ தரியாது
நன்று இரவில் சோறளித்த நற்ருய்காண்!

என்று நம் பெருமான் போற்றிப் பரவியுள்ளார்கள்.

## சிதம்பர தரிசனப் புறப்பாடு

பெருங்கோயில் என்றும், பூர்வ ஞான சிதம்பரம் என்றும் விளங்கும் தெய்வப் பதியினிடத்தே ஒளியெனவும், வெளியெ னவும் வகுப்பரிதாம் பொற்சபை இடத்தும், சிற்சபை இடத் தும், ஆனந்தத் தாண்டவம் புரிபவர் தில்லேக் கூத்தர். அவரவர் பக்குவத்திற்கு ஏற்றவாறு சகள- உபகள- நிட்க ளக் காட்சி அளிப்பவர் அவர். வள்ளல் தமக்கு ஐந்து மாதக் குழவியில் தானே எல்லாம் வெளியாகக் காட்டினவர்.ஆதலின் உத்தரஞான விளக்கம் ஈதுஎனும் உண்மையை வெளிப்படத் தொற்றுவித்தவர்.

அருளேபழுத்தசிவதருவில்அளிந்தபழம்தந்தடியேனேத்
தெருளேசிற்றம்பலவா நின்செல்வப்பிள்ளே ஆக்கினேயே

மருளே முதலாம் தடைஎல்லாம் தீர்ந்தே நின்பால்
வளர்கின்றேன்
பொருளே இனி நின்தனைப்பாடி ஆடும் வண்ணம்
புகலுகவே.

அப்பாஎன்று ஓர்கால் அழைக்கின்றேன் அப்பொழுதே
அப்பா மகனேஎன்று ஆர்கின்றான்- துப்பார்
சடையான் சிற்றம்பலத்தான் தானே தான் ஆனான்
உடையான் உளத்தே உவந்து.

கொலை புரிவார் தவிர மற்றை எல்லாரும் நினது
குலத்தாரே நீ எனது குலத்து முதல் மகனே.

என்று பலவாறு திருவாய் மலர்ந் தருளியபடி அடிகள் தம்மை முதல் செல்வப் பிள்ளை ஆக்கிக் கொண்டு ஆனந்தத் தாண்டவம் புரியும் நடராசப் பெருமானைத் தரிசிக்கும் பேர் அவாக் கொண்டிட்டார்கள். நம்பெருமான் சென்னையினின்று புறப்பட்டார்கள்; அன்பர்களுடன் வண்டிப்பாதையாய் இடையில் சிவத்தலங்களைத் தரிசித்தார்கள்; புதுச்சேரியில் சில நாள் தங்கிப் பின்னர் சிதம்பரம் சென்றடைந்தார்கள்.

## ஆனந்தத் தாண்டவன் தரிசனம்

ஆங்கே,

திருவோங்கு பொற்சபையும் சிற்சபையும்
எம்பெருமான் செய்யா நின்ற
உருவோங்கும் ஆனந்த தாண்டவமும்

தாம் கண்டு தனித்த பேரன்பும் மெய்யறிவும் விளங்கத் தேறினார்கள். தெளிந்த சித்தம் உடையவர்களாய்,

அம்பலத் தரசே அரு மருந்தே
ஆனந்தத் தேனே அருள் விருந்தே -என்றும்

திருவண்ண நதியும் வளை ஒருவண்ண மதியும்'' என்றும் பாட்டின் ஈற்றில் 'கமல குஞ்சித பாதனே' என்றும் தூக்கிய பாதம் துதித்திட்டார்கள்.

சந்ததம் எனக்கு மகிழ்தந்தை நீ உண்டு; நின்
தன்னிடத்தே ஏமவல்லித் தாய் உண்டு

என்று அம்மை அப்பனுமாம் தன்மையினால்,

சிவகதி எனும் பெரிய வாழ்வு உண்டு;
தாழ்வும் உண்டோ?
என்று உள்ளம் உவகை பூத்திட்டார்கள்.

நான்முகனும் மாலும் அடிமுடியும் அறிவரிய பர
நாதமிசை ஓங்கு மலையே;
ஞான மயமான ஒரு வான நடு ஆனந்த
நடனம் இடுகின்ற ஒளியே!

என்று சிதாகாய வெளியில் நிட்களமாக விளங்கும் பரமராசியத்தைப் புலப்படப் போற்றிட்டார்கள்.

## அருள் தாயினைப் போற்றல்

இடப்பால் விளங்கும் அருள்தாயாம் சிவகாம வல்லியை,
உலகின் உயிர்வகை உவகையுற இனிய அருளமுதம்
உதவும் ஆனந்த சிவையே!

என்று புகழ்ந்திட்டார்கள். அத்தாயின் அருளால் ஆன்மாக்களாகிய குழந்தைகள் மூவகை ஆன்ம வர்க்கங்களாகப் பிரிக்கப் படுகின்றார்கள். அவையவைகளின் பரிபாகத்திற்கு ஏற்றவாறு உருவமும், உயிர்ப்பும், உணர்ச்சியும், புறப்புற அமுதம், புற அமுதம், அகப்புற அமுதம், அக அமுதம் முதலாகஅருள் அமுதம் ஈருக உள்ள சாதாரண வகைகள் அருத்துகின்றாள். எனவே,

பரவப் பரநிலைக்கு ஏற்ற பருவம் உணர்ந்து
அருள்கின்ற பரையாம் தாயே! — என்றும்;
இம்மை மறுமை இரண்டும் ஒருங்கே
ஒருமை தனில் உறுவிக்கும் வண்ணம்
அருமை பெறு பெருமைதனை ஈந்துளனை
அளித்த அறிவே; என்றும் திவ்ய மங்கள
சொரூபமாக உடையவளே! — என்றும்;
பொய்யாத மொழியும்மயல் செய்யாதஎனும்பாட்டால்
நாள்அவம் கழியாத அகப் பணி புரிந்து உண்மையே புகன்று
விடயம் புரியாத மனமும் உட்பிரியாத சாந்தமும்
தளராத மதியும், கிட்டா வாழ்வும், வேறு எண்ணு
நிறைவும், நினைமறவா நெறியும், அதன்மேல்

இறவாத தகவும், பிறவாத கதியும் தருவாய் என்றும்; ஆன்மாக்களின் சாதன சாத்திய முறையை வகுத்துக் கூறினர்கள்.

அண்ணலார் மகிழ அவர் புடை அமர்ந்து அகில
சராசரங்களை ஈன்று அருள் பாலிக்கும்
பரசிவானந்த வல்லி உமையே!

என்றும்; அருள்தாயைப் புகழ்ந்துபோற்றினர்கள். சிறுதெய்வ நெறிவெறுத்து அவள் ஆற்றல் விளக்கி, அம்மையையும் அப்பனையும் ஒன்ருய் உணர்ந்து,

ஆடிய பாதம் மன்று ஆடிய பாதம் - என்றும்;
அம்பலத்தில் ஆடுகின்ருர் பாங்கிமாரே-அவர்
ஆட்டம்கண்டு நாட்டம் கொண்டேன்பாங்கிமாரே

என்றும்;அநேக அருள்பாடல்களை உடல்குளிர,உயிர்தழைக்க, உணர்ச்சி ஓங்க, உளங்கனியப் பாடித் தம்மை மறந்து அருள் அமுது உண்டு தேக்கி, அம்பலம் உடையார் அருள் கடலில் ஆழ்ந்தார்கள்.

நான்மறந்தேன்எனினும்எனைத் தான்மறவான் எனது
நாயகன் என்று ஆடுகின்றேன் எனினும்இதுவரையும்
வான்மறந்தேன்; வானவரைமறந்தேன்; மால்அயனை
மறந்தேன்;நம் உருத்திரரை மறந்தேன்; என்னுடைய
ஊன்மறந்தேன்;உயிர்மறந்தேன்;உணர்ச்சி எலாம்
மறந்தேன்;
உலகம்எலாம் மறந்தேன்; இங்கு உன்னை மறந்து
அறியேன்;
பால்மறந்த குழவியைப்போல் பாரேல்இங்கு எனையே;
பரிந்து நினது அருள்ஜோதி புரிந்து மகிழ்ந்து
அருளே.

என்று துதித்தார்கள். அருள் ஆனந்த வாரியில் மூழ்கினர்கள்! இவ்வண்ணம் சிலநாள் தில்லையில் தங்கினர்கள். சிவானந்த வாழ்வில் திளைக்கலானர்கள்.

## கருங்குழியை அடைதல்

பின்னர் பெருமான் தெற்கே உள்ள தலங்களையும் மதுரை முதலிய தலங்களையும் தரிசித்துக் கருங்குழியை வந்து

அடைந்தார்கள். சிலநாள் கழித்து நம் பெருமானின் இளைய தமையனர் பரசுராமர் அங்கே அரனடி அடைந்திட்டார்.

அதன்பின் அவ்வூரில் உள்ள வேங்கடம்-முத்தாலம்மை என்போர் மிகுந்த பத்தி பாராட்டுவாராயினர். தங்கள் இடத்திலேயே தங்க வேண்டும் என்று விரும்புவாராயினர். விரும்பியபடியே வள்ளல் நீண்டகாலம் தங்கியருளினர்கள்.

## தண்ணீர்விளக்கு எரிந்தது

நமது பெருமான் கருங்குழியில் தங்கியிருந்த காலங்களில் இரவில், அவர்கள் வீட்டில் பதிகங்கள் இயற்றுவது வழக்கம். அதற்காக நாள்தோறும் அவ்வீட்டுப் அம்மையார் விளக்கேற்றி வைப்பது வழக்கம். ஓர் நாள் ஒரு சுபகாரிய நிமித்தம் அடுத்த ஊருக்குச் செல்ல வேண்டியிருந்தது. அதனல் முத்தாலம்மாள், மாலை நேரத்தில் புறப்பட்டுப் போகும் அவசரத்தில், அகண்டத்தில் எண்ணெய் வார்த்து வைத்தார். மேற்கொண்டு எண்ணெய் வைக்க வேண்டிய கலசம் உடைந்து போனபடியால் பழகுவதற்குப் புதியதொரு கலசத்தில் நீர் வார்த்து மாடத்தருகில் வைத்து விட்டார். வேறு பாத்திரத்தில் எண்ணெய் வைக்க மறந்தார்.

வள்ளற்பெருமான் அகண்டத்தில் எண்ணெய் குறையும் தோறும், பக்கத்தில் நீர்விட்டு வைத்திருந்த கலசத்தில் எண்ணெய் இருப்பதாகவே கருதி இரவு முழுதும்குறையக் குறைய அந்த நீரையே அகண்டத்தில் விட்டுக்கொண்டு, பதிகங்கள் எழுதும் வேலையில் ஈடுபட்டிருந்தார்கள். மறுநாள் அம்மையார் திரும்பிவந்து பார்க்கையில் மகிமை வெளியாயிற்று.

மெய்விளக்கே விளக்கல்லால் வேறு விளக்கில்லை
 என்றுர் மேலோர்; நான்
பொய்விளக்கே விளக்குஎன உள்பொங்கிவழிகின்
 றேன்; ஓர் புதுமை அன்றே;
செய்விளக்கும் புகழுடைய சென்னநகர் நண்பர்களே
 செப்பக் கேளீர்;
நெய்விளக்கே போன்று ஒரு தண்ணீர் விளக்கும்
 எரிந்தது சந்நிதியின் முன்னே!

என்று திருமுகம் ஒன்றினால் நம் பெருமான் அச்செய்தியைத் தெரிவித்தருளினார்கள்.

## சன்மார்க்க சங்கம் நிறுவுதல்

அத்துடன் இங்குத் தங்கியருளியகாலத்தில் அகிலத்திற்கு ஆதாரமாய் விளங்கும் சமரச வேத சன்மார்க்க சங்கத்தை நிறுவியருளினார்கள். அதன் பெருந்தலைப் பதியாக வீற்றிருந்து அருள்பவர் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர். அகில உலக சகோதரத்துவத்தைப் பின்பற்றுவதே அச்சங்கத்தின் குறிக்கோளாகும். அது 1867 க்கு முன் அமைக்கப்பட்டது. பின்னர் கூடலூர் முதலான இடங்களில் அன்பர் வேண்டுகோளால் தங்கியருளினார்கள், பெருமான்.

## சுத்த சன்மார்க்க இலட்சியம்

கூடலூரில் வள்ளல் பிரசங்கம் செய்வது வழக்கம். அங்கு மஞ்சக்குப்பம் தாசில்தார் வேங்கடசுப்பு வருவதுண்டு. அவர் வெளியே செல்லுங்கால் அவர்க்கு முன் ஊதுகொம்பை ஒருவன் ஊதிக்கொண்டு செல்வது வழக்கம். அங்ஙனம் நிகழும் நாளில் ஓர்நாள் அவர் பிரசங்கத்திற்கு வரும்போது கொம்புக்காரன் மிக வேகமாக ஊதிக்கொண்டே வண்டிக்கு முன் ஓடி வந்தான். களைப்பால் அவன் உடல் நடுங்கியது.

பெருமான் அவனைக் கண்ணுற்றார்கள். இரக்கமே எனது உயிர்-என்று அருளியபடி தயையே வடிவமாக விளங்கும் வள்ளல், தாசில்தாரை வழக்கமாகப் பார்ப்பது போல் பாரா திருந்தார்கள். பிறகு அவரைப் பார்த்து ''இந்த வாழ்வு எத்தனை நாளைக்கு இருக்கும்? கொம்புக்காரனைப் போகவேண்டிய ஊருக்கு முன்பே அனுப்பி அவ்வூருக்குச் சிறிது தூரத்தே ஊதினால் போதாதோ?'' என்று அறிவுரை வழங்கியருளினார்கள். சுத்தசன்மார்க்கத்தின் இலட்சியமாகிய ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமையை உணர்த்தியருளினார்கள்.

எட்டரும் பொருளே! திருச்சிற்றம் பலத்தே
இலகிய இறைவனே! உலகில்
பட்டினி உற்றார் பசித்தனர்; களையால்
பரதவிக் கின்றனர் என்றே.

ஒட்டிய பிறரால் கேட்டபோ தெல்லாம்
உளம்பகீர் எனநடுக்கு உற்றேன்!
இட்டஇவ் உலகில் பசிஎனில் எந்தாய்
என் உளம் நடுங்குவது இயல்பே!

என்று உரைத்தருளியவாறு அக்கொம்புக்காரன் பசியால் வருந்திக் கம்பமுற்று நின்றதைச் சிறிதும் சகியாதவரானுர்கள். பிரசங்கத்தின் இடையில் அப்பொழுதே அவனுக்கு ஆகாரம் கொடுக்கச் செய்தருளினுர்கள்.

## கல்பட்டாரை ஆட்கொள்ளல்

பின்னர் திருநறுங்குன்றத்தில் கல்பட்டு ஐயா என்னும் யோகியார் தம்மை ஓர் ஞானாச்சாரியார் இன்ன மாதம், இன்ன தேதி, இன்ன கிழமை, இத்தனை மணிக்கு வலிய வந்தாட்கொள்வார்கள் என்று தாம் உணர்ந்தபடி, பலருக்கும் உரைத்து, பலருஞ் சூழ அவராற் குறிப்பிடப்பட்ட அதே நேரத்தில் நமது வள்ளற் பெருமான் வருகையை மாருத நம்பிக்கையுடனும், பேரன்புடனும், எதிர்பார்த்திருந்தனர். பிள்ளைப் பெருமான் அவர் எண்ணி எதிர்பார்த்திருந்த அதே நேரத்தில், அவர் முன் தோன்றி தரிசனம் தந்து கடைக்கணித்தாட் கொண்டு அருளினுர்கள்.

ஒப்பற்ற ஞானதேசிகரால் ஆட்கொள்ளப்பட்ட கல்பட்டு ஐயா தம்மை மறந்து, பரவச நிலை எய்தி, பன் முறைப் பணிந்து போற்றி நிற்க, பெருமான் ஆணைப்படி வடலூர் சேர்ந்து, அவருக்காக அமைக்கப் பட்டிருந்த சிறு குடிலில் அமர்ந்து, யோகநிலை மாருது விளங்குவராயினர்.

## திரு அருட்பா வெளியிடல்

வள்ளல் பெருமான் திருஒற்றியூர், சிதம்பரம், கருங்குழி, கூடலூர் முதலிய இடங்களில் தங்கிய காலங்களில் பாடிய பிரபந்தங்களையும், பதிகங்களையும் சிலர் தனித்தனிச் சிறு புத்தகங்களாகப் பிழைகளுடன் அச்சிட்டு வழங்கி வருவாராயினர். அதைக் கண்டனர் சமரச வேத சன்மார்க்க சங்கத்தினர். அச்சங்கத்தை அபிமானித்து வந்த புதுவை வேலர், சிவானந்தபுரம் செல்வராயர், இறுக்கம் இரத்தினம் முதலிய

அன்பர்கள் பெருமானை அணுகினர். ''தேவரீர் திருவாய் மலர்ந்தருளிய அமுத மெய் மொழிகளாம் அருட்பாக்களை அச்சிட உத்தரவாக வேண்டும்'' என்று விண்ணப்பித்தார் கள். அதற்கு இசையாதிருந்தார்கள் வள்ளல். அன்பர்கள் மீண்டும் வற்புறுத்தி வேண்டினார்கள். பின்பு பெருமான் இசைந்தருளினார்கள்!

## திருமுறைகள் வகுத்தல்

உடனே உபயகலாநிதிப் பெரும்புலவராகிய தொழுவூர் வேலாயுதனாரைக் கொண்டு, அதுவரை பாடிய பாடல்களில் கணபதி தோத்திரம், திருத்தணிகைப் பதிகம், கந்தகோட்டப் பதிகம் நீங்கலாக,மற்றைய பாடல்கள் அனைத்தையும் நான்கு திருமுறைகளாக வகுக்கச் செய்தார்கள்.

## ஒவ்வொரு பாடலும் 63 பாடல்களுக்குச் சமம்

அத்தருணம் பிரதம மாணாக்கர் தொழுவூரார், செய்யுள் நடையில் 63 பாடல்களால் ஆக்கப்பட்ட ''திருவருட்பா வரலாறு'' என்னும் நூலை இயற்றித் தமது ஞானாசிரியர் சந்நிதியில் சமர்ப்பித்தார். அதன் ஒவ்வொரு பாடலும் 63 பாடல்களுக்குச் சமம் என்று பெருமானால் ஆமோதிக்கப் பெற்றார். திருவருட்பா நான்கு திருமுறைகளுக்குப் பின்னால் சேர்த்து அச்சிட ஆணையும் பெற்றிட்டார்.

## நான்கு திருமுறைகள்

1867; அட்சய வருடம்; தை மாதத்தில் ''திருவருட்பா'' என்னும் பெயருடன் நான்கு திருமுறைகளும் சேர்த்து அச்சிடப் பெற்று வெளிவந்தது. அப்பொழுதே இனி அச்சிடப் படவேண்டிய நூல்கள் என்று 43 பெயர்கள் வெளியிடப்பட்டி ருந்தன. அவற்றில் இரண்டு மட்டும் பின் வெளிவந்தன.

## திருவருட் பிரகாச வள்ளலார்

வெளிவந்த திருவருட்பா முகப்பில் தம்மைத் ''திருவருட் பிரகாச வள்ளலார்'' என்று குறிப்பிட்டிருந்ததை நோக்கினார் கள் பெருமான். ''ஏன்காணும், பிச்! உம்மைத் திருவருட்

பிரகாச வள்ளலார் என்று போடச்சொன்னது யார்?'' என்று அதட்டிக் கேட்கலுற்றார்கள்.

தொழுவூரார் அச்சத்துடன் பெருமான் திருவடிக்கண் சிந்தை வைத்து நின்றனர். சிறிது நேரம் கழிந்த பின்னர் பெருமான், ''திருவருட் பிரகாச வள்ளல்-அதாவது கடவுள் ஆர் என்னும் சிதம்பரம் இராமலிங்கம் பிள்ளை'' என்று பிரித்துக் காட்டினார்கள்.

## பிற திருமுறைகள்

பின்னல் 1880 பிரமாதிச வருடம் தொழுவூரார் விநாயகர் தோத்திரம், கந்தகோட்டப் பதிகம், திருத்தணிகைப் பதிகம் முதலியவைகளைச் சேர்த்து ஐந்தாம் திருமுறையாக வெளியிட்டார். இவை நீங்கலாக ஏனைய பாடல்கள் அனைத்தையும் ஆறும் திருமுறையாக வகுத்து வைத்திருந்ததை வள்ளல் உணர்ந்திட்டார்கள். ''சுத்த சன்மார்க்க இலட்சிய அனுபவ காலம் வருகிற வரையில் வெளியிடக்கூடாது'' எனக் கட்டளையிட்டார்கள்.

தொழுவூரார் குருவாணையைச்சிரமேல் கொண்டிட்டார். அருட்பா வரலாறு 45-வது பாட்டில் ''ஆருவது திருமுறை ஆரியனார் தம் அருளானே'' என்று குறிப்பிட்டபடி கடைசி வரை திருவருள் ஆணையை எதிர்பார்த்து சும்மா இருந்தனர்.

ஆனல் பின்னளில் ஆருவது திருமுறை 1885 தாரண மாசி 3-ல் வெளியிடப்பட்டது. அடுத்து பிருங்கி மாநகரம் இராமசாமி என்பவரால் 6 திருமுறைகளும் சேர்த்து ஒரே தொகுப்பாக 1895-ல் அச்சிடப்பட்டது.

## பரோபகாரச் சஞ்சாரம்

அடுத்து நம் பெருமான் தாம் வந்த வேலைகளைத் திறமுறச் செய்திட எண்ணினார்கள்.

கருணையும் சிவமே பொருள் எனக்காணும்
காட்சியும் பெறுக மற்றெல்லாம்
மருள்நெறி எனநீ எனக்கு அறிவித்த
வண்ணமே பெற்றிருக் கின்றேன் -என்றும்;

ஈரமும் அன்பும் கொண்டு இன்னருள் பெற்றேன்
என்மார்க்கம் இறவாத சன்மார்க்கம் தோழி -என்றும்;

துரியமேல் பரவெளியிலே சுகநடம் புரியும்
பெரியதோர் அருள்ஜோதியைப் பெறுதலே எவைக்கும்
அரிய பேறு; மற்றவையெல்லாம் எளியவே;அறிமின்!
உரிய இம்மொழி மறைமொழி; சத்தியம் உலகீர்!

-என்றும்; திருவாய் மலர்ந்தருளி பரோபகாரமாகவே எங்கும் சஞ்சரித்தார்கள். ஆங்காங்குச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினுர்கள். உண்மை இன்னது என்பதைச் சத்தியம் செய்து விளக்கியருளினுர்கள்.

## ஒருமைத் திருநடம்

''ஒப்பற்ற தனித்தலைமைப் பெரும்பதியாக விளங்கும் கடவுள் ஒருவரே. அவர் இயற்கை விளக்க நிறைவாகிய சத்திய ஞான சபையில், இயற்கை உண்மை நிறைவாகிய சிவானந்த ஒருமைத் திருநடச் செய்கையை எவ்வுயிரும் இன்படைதல் பொருட்டேசெய்து அருள்கின்றுர்'' என்றுரைத்தருளினுர்கள்.

நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து
நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே
நிறைந்து நிறைந்து ஊற்று எழும்
கண்ணீர் அதனுல் உடம்பு
நனைந்து நனைந்து அருள் அமுதே நல்நிதியே ஞான
நடத்தரசே என் உரிமை நாயகனே என்று
வனைந்து வனைந்து - ஏத்திடல் வேண்டும்.

அதன் வழி அவர் அருள் துணையால் இவருத சுத்தசிவ சன்மார்க்க நிலையில் நின்று, ஒப்பற்ற அரிய பெரும் பேருகிய அவரது அருள் வண்ணமாம் அருட்பெரும் ஜோதி விளக்கம் கொண்டு, அவரது இயற்கை வண்ணம் கண்டு, புறத்தில் தழுவிப், புணர்ந்து, கலந்து, அவர் வடிவம் தான் ஆதல் வேண்டும். அதனுல் மரணம், பிணி, மூப்பு முதலிய அவத்தைகள் எல்லாம் நீங்கப் பெற்று, எக்காலத்தும் அழியாத மாற்று இவ்வளவு என்று அறியப்படாது விளங்கும் பொன்வடிவம் கொண்டு அவரை அகத்தினும் புணர்ந்து,

கலந்து ஒன்ருகி விளங்க வேண்டும். அத்துடன் சுத்த சிவ துரியா அதீதத்தே சிவமயமாய் நிறைந்து சுத்த சிவானந்த அனுபவப் பெரும் போகப் பெருஞ்சுகத்தால் பெருகி எங்கும் நிறைந்தே சின்மயமாய்த் தன்மயமாய் விளங்கல் வேண்டும். அந்நிலேயே இவ் உயர் உடைத்தாகிய மனித தேகத்தைப் பெற்றவர்களாகிய நாம் பெற வேண்டிய ஒப்பற்ற பேரின்பச் சித்திப் பெருவாழ்வாகும் என்று குறிப்பிட்டார்கள்.

## சத்தியமாக வேண்டுவன

அவ்வாழ்வைப் பெறுதற்கு அக்கடவுளின் அருள்விளக்கம் வேண்டும். அவ்விளக்கம் நம் கருத்தில் காரியப்பட்டு விளங்கச் சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய இலட்சியமாகிய ஆன்மநேய ஒருமைப் பாட்டுரிமையும் ஜீவகாருண்ய விளக்கமும் சத்திய மாக வேண்டும்.

## கடவுள் மயமானவர்கள்

அருள் என்பது கடவுள் இயற்கை விளக்கம் அல்லது கடவுள் தயவு. ஜீவகாருண்யம் என்பது ஆன்ம விளக்கம் அல்லது ஆன்மாக்களின் தயவு. ஒருமை காரணமாகிய சிறிய விளக்கத்தைக் கொண்டு பெரிய விளக்கத்தையும், சிறிய தயவைக் கொண்டு பெரிய தயவையும் பெறுதல் கூடும்.

இது சிறிய நெருப்பைக் கொண்டு பெரிய நெருப்பைப் பெறுதல் போல என்று அறிய வேண்டும். ஆதலால் புண்ணி யம் என்பதும் சன்மார்க்கம் என்பதும் ஜீவகாருண்யம் ஒன்றே ஆகும். அந்த ஜீவகாருண்ய ஒழுக்கத்தினுல் வரும் விளக்கமே கடவுள் விளக்கம். அதனுல் வரும் இன்பமே கடவுள் இன்பம். அக்கடவுள் விளக்கத்தையும் இன்பத்தையும் பலகால் அறிந்து அடைந்து அனுபவித்து நிறைவு பெற்ற சாத்திய ஞானிகளே பேரின்ப இலாபத்தைப் பெற்றவர்கள். அவர்களே கடவுளே அறிவால் அறிந்து கடவுள்மயம் ஆனவர்கள் என்று உணர்த்தி ஞர்கள். அதனே,

கந்த நாள்மலர்க் கழலிணே உளத்துஉறக்
கருதுகின்றவர்க்கு எல்லாம்

பந்த நாள்வலே அவிழ்த்து அருள்சிதம்பரை
பரம்பரை உடன்ஆடும்
அந்த நாள்மகிழ்வு அடைபவர் உளர்சிலர் ;
அவர்எவர் எனில்இங்கே
இந்த நாள்முறை திறம்பலராய் உயிர்க்கு
இதம்செயும் அவர்அன்றே!

என்று விளக்கியருளினார்கள்.

## திருவருள் நடம்

உலகத்தில் ஷடாந்த சமரச சுத்த சன்மார்க்க சத்திய நெறியையும், நிலேயையும், இன்பானுபவத்தையும் வெளிப் படக் காரியப்பட்டு விளங்க விளக்கும் பொருட்டே, இயற்கை உண்மை வடிவாகிக் காலவரை உரைப்பவெலாம் கடந்து, இவ்வுலகில் அன்றி எவ்வுலகிலும் அப்புறத்து அப்பாலும் சிவ ஞானப் பெருஞ்செல்வம் ஒன்றே சிறந்து விளங்கும் படிக்கு ஆண்டவர் திருவருள்நடம் புரிகின்றார் எனஅறிவுறுத்தினார்கள்.

## சாலேயமைக்க எண்ணல்

அவ்வண்ணம் புரிதல் பூர்வோத்தர ஞாயப்படி உள்ளது. ஆகலின் பூர்வஞான நடம் திகழ்வதற்கு இடமாகத் தில்லேச் சிதம்பரத்து எல்லாம் அமைக்கப்பட்டு விளங்குகிறது.

இனி உத்தர ஞான நடம்புரிதற்கு அடையாளமாகச் சமரச சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய இலட்சியமும் முதல் பிரிவும் ஆகிய ஜீவகாருண்யத்தைத் தோற்றுவிக்க சுத்த சன் மார்க்க சத்திய தருமச்சாலேயும் அமைப்பதற்கு எண்ணம் கொண்டிட்டார்கள்.

## தலேவன் பணித்தது

என்பாட்டுக் கெண்ணாத தெண்ணி இசைத்தேன்; என்
தன்பாட்டைச் சத்தியமாத் தான்புனேந்தான்
-முன்பாட்டுக்
காலேயிலே வந்து கருணேயளித் தேதருமச்
சாலேயிலே வாஎன்றான் தான்.

என்று எல்லாம் வல்ல தலேவன் நம் பெருமானுக்குப் பணித் தருளினன். ஆதலின் மன்னுயிர் எல்லாம் ஏறுற்றச் சுகநிலே

அடைந்து களித்திட நினைத்தார்கள். அது முற்றும் நாள், ஈது என உணர்ந்திட்டார்கள்.

## உத்தர ஞான சிதம்பரம்

தாம் மேற்கொண்ட கருத்து முற்றத் தகுதியான இடம் பூர்வ ஞான சிதம்பரத்தின் வடமேற்கில் காத தூரத்தில்;

நடிப்பார் வதிதில்லை நற்கோ புரத்தின்
அடிப்பார்வையும் வடக்கே ஆர்ந்து - கொடிப்பாய
நின்று வளர்மலைபோல் நெஞ்சே பார்த்தால் தெரியும்
இன்று எவ்விடத்து எனில் இப்பாட்டு;

என்னும் பாட்டில் குறிப்பித்தவாறு நான்கு கோபுரங்களும் ஒருங்கே தெரியும் எல்லையாகிய வடலூர் என்றும்; பார்வதி புரம் என்றும்; உலகியலால் குறிக்கப்பட்ட குறிப்புப் பெயர் களும் பெற்று விளங்கும் தலமே தகுதியுடையது என்று திரு வருளால் உணர்ந்திட்டார்கள். அதை உணர்ந்த அவ்வூரின் மக்கள் சுமார் 80 காணி நிலத்தைச் சுவாமிகள் பெயருக்கு இனம் சாசனம் செய்து கொடுத்திட்டார்கள்.

அப்பதிக்கு உத்தர ஞான சித்திபுரம் என்றும்; உத்தர ஞான சிதம்பரம் என்றும்; திருவருளால் ஆக்கப்பட்ட ஆக்கச் சிறப்புப் பெயர்களும் சூட்டப் பெற்று, விளங்கச் செய்திட் டார்கள், பெருமான். அங்கு முதலாவதாகச் சத்திய தருமச் சாலைக்கு இடம் அமைக்கும் வேலை தொடங்கப்பட்டு நடந்து வரலாயிற்று.

## அழைப்பு விடுத்தல்

வள்ளற்பெருமான் பல இடங்களிலும் சஞ்சரித்துத் திரும்புவதற்குள் குறிப்பிட்டபடி ஆகார தரும விருத்தி தொடக்கம் செய்ய, விழல் வேய்ந்த மண் கட்டடச் சாலையும், செங்கல் கட்டடச் சாலைக்கு அத்திவாரம் போடுவதற்கும்; கிணறு, கேணி, நீர்நிலை எடுப்புகளுக்கும், தொடக்கம் செய்ய வேண்டிய ஏற்பாடுகளும் முன்னதாகவே நடந்தேறியிருந்தது.

பிரபவ வருடம் சித்திரை மாதம் 14ம் தேதி சத்தியதருமச் சாலை ஆரம்பவிழா அழைப்பிதழ் அச்சிட்டு பல இடங்களிலும் உள்ளவர்களுக்கு அனுப்பப்பட்டது. எல்லாரும் வந்து சேர லாயினர்.

## வைகாசி 11

பிரபவ வருடம்; வைகாசி 11ம் தேதி; குருவாரம்; இடப இலக்கினத்தில் அண்ட பிண்ட பூரண பாவனு அனுட்டான விதியில் குறிப்பிட்டபடி, எல்லாம் வல்ல தலைவனை ஆறுகாலத்திலும், அண்டத்திலும் பிண்டத்திலும் வழிபடும் வகை தெரிவித்து, வழிபாட்டிற்குச் சத்திய ஞானதீபம் ஒன்றமைத்து என்றும் தடைபடாது விளங்கச் செய்திட்டார்கள். சமரச சுத்த சன்மார்க்கத்தின் முதல் பிரிவாகிய சீவகாருண்யத்தின், முதல் பாகத்தை வரைந்து கொடுத்து, சிதம்பரம் வேங்கட சுப்பு என்பாரைக் கொண்டு வாசிக்கச் செய்திட்டார்கள்.

சமரச சுத்த சன்மார்க்க சத்திய தருமத்தை விளக்கி உரைத்திட்டார்கள். தருமச்சாலை செங்கல் கட்டட அத்திவாரமும், சமரச வேத பாடசாலை மற்றும் உள்ள தருமச்சாலையைச் சார்ந்த வைத்தியசாலை, சாத்திரசாலை, உபாசனுசாலை, யோக சாலை, விவகாரசாலை போன்ற கிளைச்சாலைகளும் அமைப்பதற்கு, வேண்டிய ஏற்பாடுகளும் தொடக்கம் செய்வித்தார்கள். அன்றுமுதல் மூன்று நாட்களுக்கு நாள் ஒன்றுக்குப் பதினுயிரம் பேர்களுக்குமேல் ஆகார தருமவிருத்தி விழல் வேய்ந்த இடத்தில் செய்வித்து மகிழ்ந்தார்கள்.

## அடுப்புப் புகைந்து கொண்டே இருக்கவேண்டும்

அந்நாள் தொட்டு தடைபடாது சத்திய ஞானதீபம் பேணப்பட்டு வருகிறது. பசித்து வருபவர்களுக்குச் சாதி சமய, மத, சாத்திர, கோத்திர உயர்வு தாழ்வு நோக்காது, ''எப்போதும் சாலையில் அடுப்புப் புகைந்து கொண்டே இருக்க வேண்டும்'' என்று வள்ளற் பெருமான் கட்டளையிட்டருளிய வண்ணம் இன்றும் பசியாற்றப்பட்டு வருகிறது.

வருடந்தோறும் வைகாசி மாதம் 11ம்தேதியன்று, வள்ளல் சுத்த சன்மார்க்கத்தையும், சத்திய தருமத்தையும், வெளிப்படுத்தி விளக்கிய நாள் ஆதலால், சன்மார்க்க வருடப் பிறப்பாகக் கொண்டாடப்படுறது. சொற்பொழிவுகளும், வழிபாடுகளும், விரிவான தரும விருத்தியும் நடைபெறுகிறது.

## தருமச்சாலையில் பெற்ற பேறு

-முன்பாட்டுக்

காலையிலே வந்து கருணையளித்தே தருமச்
சாலையிலே வாளன்ருன் தான்.

என்று ஆண்டவர் வள்ளற் பெருமானுக்குத் தெரிவித்திட்டார். அதன்படிச் சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய இலட்சியமாகிய ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமையுடன்,

எவ்வுயிரும் பொது எனக்கண்டு இரங்கி உபகரித்தும்;
எத்துணையும் பேதமுறுதுளஎவ்வுயிரும் தம்முயிர்போல்
எண்ணி உள்ளே ஒத்தும்;
கருணை ஒன்றே வடிவாகி எவ்வுயிரும் தம்முயிர் போல்
கண்டு ஞானத்
தெருள்நெறியில் சுத்தசிவ சன்மார்க்கப் பெருநீதி
செலுத்தியும்;
காலையிலே என்தனக்கே கிடைத்த பெரும்பொருளே!
களிப்பே!என் கருத்தகத்தே கனிந்தநறுங் கனியே!
மேலையிலே இம்மையிலே ஒருமையிலே தவத்தால்
மேவுகின்ற பெரும்பயனும் விளைவைஎலாம் தருமச்
சாலையிலே ஒருபகலில் தந்ததனிப் பதியே!
சமரசசன் மார்க்கசங்கத் தலையமர்ந்த நிதியே!
மாலையிலே சிறந்தமொழி மாலைஅணிந் தாடும்
மாநடத்தென் அரசே!என் மாலைஅணிந் தருளே!

என்று குறிப்பிட்டபடி இம்மைப் பயன், மறுமைப் பயன் இவைகட்கும் மேற்பட்டதாகிய ஒருமையினும் பெருந்தவம் இயற்றிப் பெறக்கூடியதாகிய பெரும்பயனுகிய விளைவுகள் எல்லாவற்றையும் தருமச் சாலையிலே அந்த ஒருபகலில் எல்லாம் வல்ல தனித்தலைவன் தரத் தாம் பெற்றுக் கொண்டதாக வெளிப்படுத்தியுள்ளார்கள்.

## சித்திக்கப் பெற்று மகிழ்கின்றனர்!

ஆதலினுல் நம்பெருமான் கட்டளைப்படிஅந்தஉளவறிந்த உண்மை உணர்வு உடையார் பலரும் சத்திய தருமத்திற்கு தானியமாகவும், பொருளாகவும், மற்றும் உள்ள சாமான்களாகவும் கொடுத்து மகிழ்கின்றனர்.

குருவாரந்தோறும், பூசங்கள்தோறும் மற்றை விழாக்கள் தோறும் மெய்யன்பர்கள் குழாத்துடன் அகவல் பாராயணம் செய்கின்றனர். அன்புடன் சத்திய தருமச்சாலையை வலம் வருகின்றனர். முறைப்படி பஜனை செய்கின்றனர். அதனுல் கல்வி, அறிவு, யோகம், போகம் முதலியன சித்திக்கப் பெற்று மகிழ்கின்றனர்.

## உண்மை நெறி

எல்லாம் வல்ல திருவருட்பிரகாச வள்ளலாய் விளங்கு பவர்கள் நமது பெருமான். அவர்கட்கு அருட்பெருஞ்சோதி ஆண்டவன் தருமச்சாலையிலே வா என்று அருளினுன். அதன் படி அம்மெய்ஞ்ஞான நெறியில் திளைத்திட்டார்கள். இந்திரிய ஒழுக்கம், கரண ஒழுக்கம், ஜீவ ஒழுக்கம், ஆன்ம ஒழுக்கம் நான்கும் நிறைந்து, கருணை வடிவாகி நிற்கும் விசார சங்கற்பம் உற்றுத் தாழும் தன்மையும் அடைந்து, உபகரா சத்தியும் தோன்றி அருள்சத்தியும் பதிந்திடுவதால் நாம் பெறும் புருஷார்த்தங்கள் நான்கு என்ருர்கள். அவை ஏமசித்தி செய்தல், சாகாக் கல்வி கற்றல், தத்துவ நிக்கிரகஞ் செய்தல், கடவுள்நிலை அறிந்து அம்மயம் ஆதல் ஆகிய நான்குமாம் என்று உரைத்தருளினுர்கள். ஏட்டில் எழுதிச் சாலைச் சுவரில் தொங்கவிட்டு, அந்த உண்மை நெறியினைப் பெற்று உய்யுங் கள் என்று அறிவுறுத்தினுர்கள்.

## ஆருயிர்கள் அனைத்திடத்தும் அன்பு

கருணையும் சிவமே பொருள் எனக் காணும்
காட்சியும் பெறுக மற்று எல்லாம்
மருள்நெறி எனநீ எனக்கு அறிவித்த
வண்ணமே பெற்று இருக்கின்றேன் -என்றும்;

கருணையே வடிவாய்ப் பிறர்களுக்கு அடுத்த
கடுந்துயர் அச்சம் ஆதிகளைத்
தருணநின் அருளால் தவிர்த்தவர்க்கு இன்பம்
தரவும் வன்புலை கொலை இரண்டும்
ஒருவிய நெறியில் உலகெலாம் நடத்த
உஞற்றவும் அம்பலம் தனிலே

மருவிய புகழை வழுத்தவும் நின்னை
வாழ்த்தவும் இச்சைகாண் எந்தாய் -என்றும்;

ஆன்ம நேய ஒருமைப்பாட்டுச் சகோதரர்களாகிய உலகில் உள்ள எல்லா ஆருயிர்கள் இடத்தும் அன்பும் தயவும் இடைவிடாது உடையராய் விளங்கினர்கள்.

## பேரன்பின் பெற்றி

திருந்தா தன்மை உடையர் ஆயினும் மேலும் இனிய உரையாலும் அல்லது மிரட்டிப் பேசுவதாலும் அல்லது பொருளைக் கொடுத்தேனும் அல்லது தெண்டம் விழுந்தாயினும், அவர்கள் திருந்தவேண்டும் என்று ஆண்டவனிடத்தில் விண்ணப்பித்தாயினும் அவர்களை நல்வழிக்கு வரச்செய்யும் பேரன்பு உடையராய் விளங்கினர்கள்.

## கடவுளாக விளங்கி நிற்கின்றூர்கள்

எவ்வுயிர் அகத்தும் கருணை வளர்க்கும் தாயாகியும், அன்பை வளர்க்கும் தந்தையாகியும், அறிவை வளர்க்கும் குருவாகியும். எத்தீமையும் அணுகாது காக்கும் துணையாகியும், இன்பை வளர்க்கும் நாயகன் ஆகியும், சுத்தசிவ துரியா அதீதத்தே சிவமயமாய் நிறைந்து எவ்வுயிரின் அகத்தும் புறத்தும் நீக்கம் இன்றி நிறைந்து விளங்குபவர்கள். ஆதலால் கடவுள் ஆகியும் விளங்கி நிற்கின்றூர்கள்.

## ஆண்டவரிடம் வேண்டுகோள்

பாதி இரவில் எழுந்தருளிப் பாவி யேனை எழுப்பியருள்
சோதி அளித்தென் உள்ளகத்தே
சூழ்ந்து கலந்து துலங்குகின்றுய்
நீதி நடஞ்செய் பேரின்ப
நிதிநான் பெற்ற நெடும்பேற்றை
ஓதி முடியாது என்போல்
இவ்உலகம் பெறுதல் வேண்டுவனே

என்று வேண்டிட்டார்கள். அத்தகைய தம் விருப்பம் நிறைவேறுமாறு தம்முடன் ஒன்ருகிக் காலவரை உரைப்ப எலாம் கடந்தே திருத்தியொடு விளங்கி அருள் ஆடல் செய்ய ஆண்டவரிடம் வேண்டிட்டார்கள்.




## பெருமானின் விருப்பம்

தங்கமே அனையார் கூடிய ஞான
சமரச சுத்த சன்மார்க்கச்
சங்கமே கண்டு களிக்கவும்; சங்கம்
சார்திருக் கோயில் கண்டிடவும்;
துங்கமே பெறும் சத்சங்கம் நீடுழித்
துலங்கவும்; சங்கத்தில் அடியேன்
அங்கமே குளிர நின்தனைப் பாடி
ஆடவும்; இச்சைகாண் எந்தாய்.

என்று பெருமான் விரும்பினார்கள்.

## திருவருட் குறிப்பு

களைப்பு அறிந்து உதவும் கருணைக் கடலாகிய கடவுள் அவ்விருப்பத்திற்கு இணங்கினார். அவர் நெடுங்காலம் மரணம் முதலிய அவத்தைகளால் துன்பம் உற்றுக் களைப்படைந்த சீவர்களை அவ்வத் துன்பங்களினின்றும் நீக்கிக் களைப்பும் கலக்கமும் தவிர்த்து அழியாத பேரின்ப சித்தியை அடைவித்தல் பொருட்டாகவே பூர்வஞான சிதம்பரத்தின் வடபால் பார்வதி புரம் என்று குறிக்கப்படுகின்ற உத்தர ஞான சித்திபுரத்தில் யாம் அளவு கடந்த நெடுங்காலம் சித்தியெலாம் விளங்கத் திருவருள் நடம் செய்வோம் என்றும், அது தருணம் மிகவும் அடுத்த சமீபித்த தருணம் என்றும், அப்பதியின் இடத்தே யாம் அருள் நடம் புரிதற்கு அடையாளமாக ஓர் ஞான சபையைக் காணுதல் வேண்டும் என்றும் திருவருட்குறிப்பால் அறிவித்திட்டார்.

## திருவுளங் கொள்ளல்

அங்ஙனம் ஆண்டவர் அறிவித்த வண்ணம் ஷடாந்த சமரச சுத்த சன்மார்க்க சங்கத்தின் தாபனாசாரியார் ஆகிய திருவருட்பிரகாச வள்ளற்பெருமான் சமரச சுத்த சன்மார்க்க சத்திய ஞானசபையையும் தோற்றுவிக்கத் திருவுளங் கொண்டிட்டார்கள்.

## சத்திய ஞானசபை

திருந்தும் என் உள்ளத் திருக்கோயில் ஞான
சித்திபுரம் என்று சத்தியங் கண்டேன் -என்றும்;

சத்திய ஞான சபை என்னுள் கண்டனன்- என்றும்; திருவருட் பாக்களில் குறிப்பிட்டபடி பூரண அருள்விளக்கம் பெற்று, எங்குமாய் விளங்கும் அகமாகிய ஆன்மப்பிரகாசமே சத்திய ஞானசபை என்றும்;

அப்பிரகாசத்திற்கு உள்ளிருக்கும் பிரகாசமே கடவுள் என்றும்; அந்த ஒளியின் அசைவே நடனம் என்றும்; அது தான் ஞானுகாச நடனம் என்றும்; அசைவுற்றதே நடராச நடனம் என்றும்; ஆனந்த நடனம் என்றும்; சொல்லப்படுகின்றது என்றும் தெரிவித்துள்ளார்கள்.

## அம்பலங்கள்

இதன் சார்பாக ஆன்ம ஆகாசம் பொற்சபை அல்லது பொன்னம்பலம் என்றும்; ஜீவ ஆகாசம் ரஜித சபை அல்லது வெள்ளியம்பலம் என்றும் சொல்லுவதால் மேற்குறிப்பிட்ட இடங்களில் கடவுள் பூரண இயற்கை விளக்கம் காரியமாயும், காரணமாயும், காரியகாரணமாயும் விளங்கும் என்றும் தெரிவித்தார்கள். பூர்வத்தில் வெள்ளியம்பலமும் பூர்வ பூர்வத்தில் பொன்னம்பலமும் விளங்க, உத்தரத்தில் ஞானசபையும் விளங்கும் வண்ணம் செய்திட முன்வந்தார்கள்.

## பூர்வ ஞானம் உத்தர ஞானத்தால் கிட்டும் பேறு

சுத்த சன்மார்க்கத்தின் பூர்வத்தில் பெறும் பேறு:

தோற்றமா மாயை தொடர்பு அறுத்து அருளின்
ஆற்றலைக் காட்டும் அருட்பெருஞ் ஜோதி! என்றும்;

உத்தரத்தில் பெறும் பேறு:

சுத்தமா மாயை தொடர்பு அறுத்து அருளை
அத்தகை காட்டும் அருட்பெருஞ் ஜோதி! என்றும்;

விளக்கியருளினுர்கள்.

## சுத்த சன்மார்க்க நிலை என்னும் பூர்வ ஞான நிலை

அவ்வண்ணம் பூர்வத்தில்- சுத்த சன்மார்க்க நிலையில் அருள் வல்லபத்தால் தத்துவங்களை வென்று நின்மலராகித் தத்துவாந்தத்தில் நின்று தம் உண்மை உணர்ந்து, இயற்கை உணர்ச்சியைப் பெற்று, இயற்கை உண்மைக்கண் இயற்கை இன்பானுபவம் செய்கின்ற சுத்த சித்தாந்தம், சுத்த

வேதாந்தம் முதலாக உள்ள ஆறுஅந்த அனுபவமும் தனித் தனியாகப் பெற்று விளங்கும் சுத்த சன்மார்க்க நிலை அனுப வம் பூர்வ ஞான நிலையில் பெறும் பேறு ஆகும்.

## சமரச சுத்த சன்மார்க்கம் என்னும் உத்தர ஞான நிலை

எல்லாத் தத்துவங்களையும் எல்லாத் தத்துவிகளையும் தோற்றுவித்தலும், இயக்குவித்தலும், அடக்குவித்தலும், மயக்குவித்தலும், தெளிவித்தலும் ஆகிய தொழில்களை எளிதில் கொடுத்தற்கு உரிய பூரண சுதந்தரமும்;

இயற்கைச் சத்திய ஞான சுகா அனுபவ பூரண சொரூப சாத்தியமும்;

எக்காலத்தும் எவ்விடத்தும் தடைபடாத நித்த-சுத்த - சத்த - ஞான - தேக சித்தியும்;

பூத சித்தி - கரண சித்தி முதலாக சிவசித்தி ஈருக உள்ள 14 சித்திகளும்;

பிண்ட சித்தி, அண்ட சித்தி, பகிரண்ட சித்தி, அண்ட ரண்ட சித்தி என்ற அந்தரங்க பகிரங்க தத்துவ தாத்துவிக சித்திகள் எல்லாவற்றையும் திருக்கடைக்கணிப்பால் செய்யும் வல்லபமும் பெற்று;

ஷடாந்த சமரச சத்திய நிலையில் சர்வ சுதந்தரத்துடன் சமரச சுத்த சன்மார்க்க ஞான அனுபவம் உற்று யாவும் தாமாக விளங்கப் பெறும் பேறு உத்தர ஞான நிலையாகும்.

## உத்தரோத்தர ஞானநிலை

கடவுளின் திருவருள் வண்ணமும், திருவடி வண்ணமும், திருமேனி வண்ணமும், அவர்தம் இயற்கைத் திருவண்ணமும் சுத்தசிவ சன்மார்க்க நிலையில் நின்று பரிபூரண அருள்விளக்க மாகிய அருட்பெருஞ் ஜோதி கொண்டு அது அதுவாகி நிறைந் திடலே உத்தரோத்தரத்தில் மாத்திரமே பெறப்படும் முற்ற முடிந்த பேறு என்பது அறியாது அறியப்படுவதாக உளது.

## முற்பகுதியும் பிற்பகுதியும்

அத்தகு பேற்றினைத் தாமே அனுபவித்து நேரிலும் வசன மூலமாகவும், தோத்திரங்கள் மூலமாகவும் விளக்கி

அருளினார்கள். பூர்வ ஞானம் என்பது சுத்த சன்மார்க்கத்தின் முற்பகுதியை விளக்குவதாயும், உத்தா ஞானம் என்பது சுத்த சன்மார்க்கத்தின் பிற்பகுதியாகிய ஷடாந்த சமரச சுத்த சன் மார்க்த்தின் அதீதத்தையும், அதீதா அதீதத்தையும் வெளிப் படுத்தி விளக்குவதாயும் உள்ளதை விளக்கியருளினார்கள்.

## மீதானத்து ஒளிர்வது

பூர்வ ஞான சிதம்பரம் முன்னரே திருவருளால் அமைக் கப்பட்டு விளங்கி வருகிறது. அதன் மீதானத்து ஒளிர்கின்ற அருள்நிலை விளங்கும் சிற்றம்பலம் எனும் சிவசுகாதீத வெளி யாம் இயற்கை உண்மை என்கின்ற சத்திய ஞான சபையில் இயற்கை விளக்கம் என்கின்ற சத்தியத் திரு உருவினராய் இயற்கை இன்பம் என்கின்ற சத்திய சிவானந்த ஒருமைத்திரு நடனத்தைத், தான் தன் அகத்தில் அருள்வண்ணம் கொண்டு கண்டு, களித்து, கலந்து, அனுபவித்திட்டார்கள்!

## நிர்மாணப்படம்

அவ்வாறு தாம் அனுபவித்தவாறே புறத்தில் இதுவரை உலகில் தோற்றம் உருத ஓர் அற்புதத் திருவுருவுடன் விளங்க அட்டகோணமாக,தாமரை மலர் மலர்ந்தால் அன்ன மெய் வண்ணத்துடன், நான் என்றும் தான் என்றும் நாடாத நிலை யில் ஞான வடிவாய் விளங்கி உள் ஒத்து எழுந்த அருள்விருப் பின் படிக்குத் தெய்வீகத் தரத்தில் தம் திருஅருட் கரங்களால் ஓர் நிர்மாணப் படம் வரைந்தருளினார்கள். வரைந்து, அன் பர்களுக்குச் செய்யவேண்டிய முறையையும் விளக்கியருளினார் கள்; அமைக்கவேண்டிய இடமும் குறிப்பித்தருளினார்கள்.

## தனித்திருக்க மேட்டுக்குப்பம் செல்லல்

தாம் தனித்திருக்கும் நோக்கு உடையவர்களாய் அந்த அருள் திருப்பணி இயற்றச் சன்மார்க்கக் குழுவினரையும் மற்றையரையும் வடலூரில் தங்க வைத்திட்டார்கள்.

தாம் வடலூருக்குத் தென்மேற்கில் இரண்டரை கல் தூரத்தில் உள்ள மேட்டுக்குப்பம் என்னும் சிற்றூரில் ஊர்ப் பொது இடமாக வைக்கப்பட்டிருந்து; இப்பொழுது எவ்வு லகும் போற்றிப் புகழ்ந்து ஈது அற்புதம் என வலம்வந்து வணங்கிவழிபட்டுய்யச் சித்திவளாகம் எனும் திருப்பெயருடன்

விளங்கும் அத்திரு மாளிகையில் 1870 பிரமோதூத வருடம் போய்த் தங்கியருளினார்கள்.

### சித்திவளாகத்தில் விளைந்தவை

அங்கு இதுவரை வெளிப்படாத அருள் திருவுரைகள் விரித்தருளினார்கள். அருட்பாடல்களும், வசன நடையில் விண்ணப்பங்களும் இரவுபகல் என வேறுபாடு இன்றி எழுதி வெளிப்படுத்தினார்கள்,

### தெய்வ அருட்கருணை

கள்ள வாதனையைக் களைந்து அருள்நெறியைக்
காதலித்து ஒருமையில் கலந்தே
உள்ளவாறு இந்த உலகெலாம் களிப்புற்று
ஓங்குதல் என்று வந்து உறுமோ?
வள்ளலே! அதுகண்டு அடியனேன் உள்ளம்
மகிழ்தல் என்றோ? எனத் துயர்ந்தேன்.
ஒள்ளியோய்! நினது திருவுளம் அறிந்தது:
உரைப்பது என் அடிக்கடி உனக்கே?

என்று சாதி சமய, மத வேறுபாடுகளால் திகைத்து, உண்மை அறியாது, உழல்கின்ற மக்கள் எலாம் அருள் நெறியைக் காதலித்து, ஒருமையில் கலந்தே, உள்ளவாறு உண்மையை உணர்ந்து களிப்பு அடைதல் என்றோ என்று சேய்க்குத் தாய் காட்டும் கருணையினும் கோடி பங்கு கருணை உடையவர் களாய் மக்களை நல்வழிப்படுத்தும் ஒப்பற்ற பெருநோக்குடன் திகழ்ந்திட்டார்கள்.

### சபைவேலை தொடங்கல்

அப்படித் திகழும் நாளில், தாம் உலகில் தோன்றி வந்த வேலையைப் பூர்த்தி செய்ய, வடலூர் சத்திய ஞான சபைக் கட்டிட வேலையை 1871 பிரஜோற்பத்தி வருடம் ஆனி மாதம் தொடங்கி தை மாதத்திற்குள் பூர்த்தி செய்ய வேண்டும் எனக் கட்டளையிட்டார்கள். வேலை தொடங்கப் பட்டு நடந்து வரலாயிற்று.

### கண்ணாடியும் தீபமும் வைத்தருளல்

சபை வேலை முற்றுப் பெற்றவுடன், உள்ளே சிறு தவறுகள் நேரிட்டிருந்ததை மேட்டுக்குப்பத்தில் இருந்த

படியே ஐயா அவர்கள் அறிந்தார்கள். அதைத் திருத்தும்படிச் செய்தார்கள். செய்யவேண்டிய அலங்காரத் திருப்பணியையும் முற்றச் செய்தார்கள். உள்ளே பொருத்துவதற்காக ஐந்தடி உயரக் கண்ணாடி சென்னையில் இருந்து வரவழைத்திருந்தார்கள். அதனை மேட்டுக்குப்பம் சித்திவளாகத் திருமாளிகையில் தம் அருட்பார்வையில் ஒரு மண்டலம் வைத்திருந்தார்கள். பிறகு அக்கண்ணாடியையும், அதன் அகத்தே ஒளிர்விக்கும் வண்ணம் தயார் செய்து வைக்கப்பட்டிருந்த அகண்ட தீபம் ஒன்றையும், புனித நெறி நின்று ஒழுகும் அன்பர்பால் கொடுத்து ஞானசபையில் பொருத்துவித்தார்கள் வள்ளல்.

## ஏழு திரைகள்

அந்த அகண்ட தீபம் சத்திய ஞானசபை அகத்தே சுடர் ஒளிவிட்டு விளங்கும்படிச் செய்வித்தார்கள். அதன் முன்னே ஏழு திரைகள் அமைக்கச் செய்தார்கள்.

அவற்றின் நிறங்கள்:

1. கருப்பு - அசுத்த மாயை 2. நீலம் - சுத்தா சத்தம்
3. பச்சை - கிரியா சத்தி 4. செம்மை - பராசத்தி
5. பொன்மை - இச்சா சத்தி 6. வெண்மை - ஞான சத்தி
7. கலப்பு - ஆதி சத்தி என்பவை ஆகும்.

## குறை நீக்கம்

அவ்வேழு திரைகளும் ஏழு சத்திகளாகும். அவை நமது ஆன்மப் பிரகாசத்தைக் காணவொட்டாது மறைத்திருக்கும் கருப்பு முதல் ஏழு திரைகளும் ஒவ்வொன்றுக நீக்கப்பட்டால் முடிவில் விளங்கும் அருட்பெருஞ் ஜோதியை நாம் முற்றிலும் தரிசிக்க முடியும்.

## தைப்பூச தரிசனம் தலைசிறந்தது

உத்தராயணத்தில் தைத்திங்கள் தேவர்களுக்கு உதய காலம் ஆகும். தைமாதமாகிய மகரத்தில் ஜீவகாரகனுகிய சூரியனும், கடகத்தில் சரீரகாரகனுகிய சந்திரனும் தன்வீட்டில் பூரணமாக விளங்கும் காலமும் தைப்பூசம் ஆகும். தைப்பூசம் ஞான நிறைவைக் குறிப்பது ஆகும்.

ஞான நிறைவு என்பதோ தேகத்தினை மாற்றிச் சுத்தம் பிரணவம், ஞானம் என்னும், என்றும் அழியாத மூவகைத்

தேக சித்தியைப் பெற்று, சுத்தசிவம் தான் ஆதலே ஆகும். ஆதலால் வடலூராகிய உத்தரஞான சிதம்பரத்தில் சத்திய ஞானசபையில் தைப்பூசத்தன்று அருட்பெருஞ் ஜோதி த ரி சனத்தைத் தலைசிறந்ததாகக் குறிப்பிட்டுள்ளார்கள்.

## ஜோதி தரிசனம்

அச்சோதி தரிசனத்தைத் தரிசிக்கப் பெறுவீர்களாகில் சகலமும் சித்திக்கப் பெறுவீர்கள் என்னும் உண்மையையும் விளக்கியருளினார்கள். அதன்படி முதல் தைப்பூச சோதி தரி சனம் 25-1-1872 பிரஜோற்பத்தி வருடம் தைமாதம் 13ஆம் தேதி வியாழனன்று தாம் மேட்டுக்குப்பத்தில் இருந்தபடியே செய்வித்தார்கள் நம்பெருமான்.

## இன்றைய வழக்கம்

ஜோதி தரிசனம் தைப்பூசத்தில் ஆறு காலம் நடப்பதும், மாதப்பூசங்களில் இரவு 8மணிக்கு, கடைசியில் உள்ள பாதி திரை இருக்க மற்ற 6திரைகளும் நீக்கப் பெற்றுத் தரிசனம் செய்விக்கப் பெறுவதும் இன்றும் வழக்கமாக நிகழ்கின்றது.

## வடல்வெளியின் பெருமை

அருள் ஓங்குகின்றது; அருட்பெருஞ் ஜோதி
அடைந்தது; என்றன்
மருள் ஓங்குறுமல் தவிர்த்தது; நல்ல வரமளித்தே
பொருள் ஓங்க நான்அருள் பூமியில் வாழப்
புரிந்தது; என்றும்
தெருள் ஓங்க ஓங்குவது உத்தர ஞான சிதம்பரமே!

ஒத்தாரையும் இழிந்தாரையும் நேர்கண்டு
உவக்க ஒரு
மித்தாரை வாழ்விப்பது; ஏற்றூர்க்கு அமுதம்
விளம்பி இடு
வித்தாரைக் காப்பது; சித்தாடுகின்றது; மேதினிமேல்
செத்தாரை மீட்கின்றது; உத்தர ஞான சிதம்பரமே!

என்று பலவாருக வடல்வெளியின் பெருமையை உத்தர ஞானசிதம்பர மான்மியத்தில் விரித்துள்ளார்கள் வள்ளல்

## அற்புதப் பத்திரிகை

மேலும் அருட்பெருஞ் ஜோதி அற்புதப் பத்திரிகை என்று வசனநடை வெளியீடு ஒன்று வரைந்து வெளிப்படுத்தினர்கள் நம்பெருமான்.

அதில்,

எல்லாம் ஆனவர் என்றும், ஒன்றும் அல்லாதவர் என்றும் சர்வ காருண்யர் என்றும், சர்வ வல்லபர் என்றும், எல்லாம் உடையராய்த் தமக்கு ஒருவாற்றுனும் ஒப்புஉயர்வு இல்லாத, சத்திய அறிவால் அறியப்படுகின்ற, தனிப்பெருந்தலைமை உண்மைக் கடவுள் ஒருவரே அகம் புறம் முதலியஎவ்விடத்தும் நீக்கம் இன்றி நிறைந்த சுத்த மெய் அறிவு என்னும் பூரணப் பொது வெளியில் அறிவார் அறியும் வண்ணங்கள்எல்லாம் ஆகி விளங்குகின்ருர்!

அவ்வாறு விளங்குகின்ற கடவுளை ஜீவர்கள் அறிந்து, அன்பு செய்து, அருளை அடைந்து, அழிவில்லாத சத்திய சுக பூரணப் பெருவாழ்வில் வாழாமல் பல்வேறு கற்பனைகளால் பல்வேறுசமயங்கள், மதங்கள், மார்க்கங்களில் பல்வேறு இலட்சியங்களைக் கொண்டு, பிறந்துபிறந்து அவத்தை வசத்தர்கள் ஆகி சிற்றறிவும் இன்றிப் பல்வேறு ஆபத்துக்களினுல் இறந்து இறந்து வீண் போகின்ருர்கள்!

இனி இச்சீவர்கள் விரைந்து விரைந்து இறந்து இறந்து வீண்போகாமல் உண்மை அறிவு, உண்மை அன்பு, உண்மை இரக்கம் முதலிய சுபகுணங்களைப் பெற்று நற்செய்கை உடையராய் எல்லாச் சமயங்களுக்கும், எல்லா மதங்களுக்கும், எல்லா மார்க்கங்களுக்கும், உண்மைப் பொது நெறி ஆகி விளங்கும் சுத்த சன்மார்க்கத்தைப் பெற்றுப் பேரின்ப சித்திப்பெருவாழ்வில் பெருஞ்சுகத்தையும் பெருங்களிப்பையும் அடைந்து வாழும் பொருட்டு, மேல்குறித்த உண்மைக் கடவுள் தாமே திருவுள்ளங் கொண்டு சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய இலட்சியம் ஆகிய உண்மை விளக்கம் செய்கின்ற ஓர்ஞானசபையை இங்கே தமது திருவருள் சம்மதத்தால் இயற்றுவித்து, ''இக்காலம் தொடங்கி அளவு குறிக்கப்படாத நெடுங்காலம், அளவு குறிக்கப்படாத அற்புத சித்திகள் எல்லாம் விளங்க

யாமே அமர்ந்து விளையாடுகின்றும்'' என்னும் திருக்குறிப்பை வெளிப்படுத்தி அருட்பெருஞ் ஜோதியராய் வீற்றிருக்கின்றார்!

ஆகலின் அடியில் குறித்த தருணம் தொடங்கி, வந்து வந்து தரிசிக்கப் பெறுவீர்களாயின் கருதிய வண்ணம் பெற்றுப் பெருங்களிப்பு அடைவதும் இன்றி, இறந்தவர் உயிர் பெற்று எழுதல், மூப்பினர் இளமை பெற்று நிற்றல் முதலிய பலவகை அற்புதங்களைக் கண்டு பெருங்களிப்பும் அடைவீர்கள் என்று அறிவித்திட்டார்கள்!

## வழிபாட்டுப் பாடல்கள்

ஆகவே சத்திய ஞான சபையில் திருக்கதவு திறக்கவும், திரைகள் நீக்கவும், காட்சியளிக்கவும், அமுதம் அருளவும் வேண்டிய வகையில் அநேக அருட்பாக்களைப் பாடி அளித்திட்டார்கள். குருவாரந் தோறும், பூசங்கள் தோறும், பஜனைக்குரியதாகக் கீர்த்தனைகளும் பாடித் தந்தார்கள்.

## அருட்பெருஞ்ஜோதி அகவல்

மேலும் அதிகாலையில் பாராயணம் செய்யவும், எல்லாச் சித்திகளையும் பெற்று உய்யவும் தாம் இவருத சுத்தசிவ சன்மார்க்க நிலையில் இருந்து அருளாம் பெருஞ்ஜோதி கொண்டு அறியப்பெற்று தான் அதுவாய் அதுதானாய், சின்மயமாய், தன்மயமாய் விளங்கி நின்று;

1. கரும ஞான சித்தி 2. யோக ஞான சித்தி
3. தத்துவ ஞான சித்தி 4. ஆன்ம ஞான சித்தி

அனுபவங்கள் நான்கிலும் அடிநிலை முடிநிலையாக விரிந்த எட்டு நிலைகளிலும்,

1. சுத்த ஞான சித்தி 2. சமரச சுத்த ஞான சித்தி

அனுபவங்களிலும்;

1. அது அதுவாகி நிறைந்தும் 2. அது அதுவாகி விளங்கியும்
3. அது அதுவாகி இனித்தும் 4. ஆங்காங்கு அதீதமாகிக் கலந்தும் 5 இவை அனைத்தும் ஆகி ஒருமித்தும்
6. அதீதா அதீதமாகித் தனித்தும்;

வயங்குகின்றவர், பெருங்கருணைப் பெரும்பதியாகிய அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர்!

அவ்வாண்டவரின் தனிப்பெருங்கருணையாகிய
அருள்வண்ணமும்;
அவ்வண்ணங்கொண்டு அறியப்படும்
திருவடி வண்ணமும்;
திருமேனி வண்ணமும்;
அவர் இயற்கைத் திருவண்ணமும்;
காரியமாகவும், காரிய காரணமாகவும், காரணமாகவும்;
விளக்கும் தன்மையும்;
சச்சிதானந்தத்தின் வண்ணங்களும்;
மூவகை ஆன்ம வர்க்கங்களின் உள்நின்று,
அவைகளைப் பஞ்ச கிருத்தியங்கள் செய்யும் வண்ணமும்;
இம்மை, மறுமை, பேரின்பம் என்னும்;
மூவகை இன்பவாழ்விலும் ஆங்காங்கு உள்நின்று;
அருள் ஏகதேசத்தைத் கொண்டும், அருள் பூரணத்தைக் கொண்டும் இயக்கி அருளும் வண்ணமும்;
அணுபட்சம், பரமா அணுபட்சம், பிரகிருதி பட்சம், சம்பு பட்சம், விபுபட்சங்களில் விளங்குகின்ற அநேக கோடி கர்த்தர்களையும், மூர்த்திகளையும், சத்தி சத்தர்களையும் பஞ்சகிருத்தியத்திற்கு உட்படுத்திப் பஞ்சகிருத்தியங்கள் செய்யும் வண்ணங்களும்;
முடிவில் ஆன்மாக்களைத் தாமாக விளங்கும் வண்ணம் செய்யும் முற்பகுதி பிற்பகுதியாக உள்ள அருள் விளக்க வண்ணங்களும்;
விரிவாகவும் தெளிவாகவும் விளங்கும் படிக்கு **அருட்பெருஞ்ஜோதி அகவல்** என்னும் ஒப்பு உயர்வு அற்ற ஞானப் பொக்கிஷத்தைச் சித்திவளாகத் திருமாளிகையில் எழுந்தருளியிருந்து, தம் தெய்வத் திருக்கரத்தால் ஓர் புத்தகத்தில் எழுதி உதவினர்கள்.

## வலம்வந்து வழிபட்டுக் காட்டினர்கள்!

அதனை முறைப்படி பாராயணம் செய்யவேண்டிய முறைகளும், சித்திவளாகத் திருமாளிகையின் நடு முற்றத்தில் பந்தலிட்டு ஞான சிங்காதனம் அமைத்து, அலங்காரம் செய்வித்து, ஞான சொருபத்துடன் ஆண்டவன் விளங்குவதாக

வலம் வந்து வழிபடவேண்டிய முறையும் கற்பித்தார்கள்.

அதற்கு வேண்டிய பாடல்களும், வடலூர் சத்திய ஞான சபையில் தோத்திரம் செய்து வழிபடவேண்டிய பாடல்களும் முறைகளும் வகுத்துக் காட்டினர்கள். சித்திவளாகத்தில் தாமே சன்மார்க்கக் குழாத்துடன் வலம் வந்து பஜனை செய்தும் காட்டியருளினர்கள்.

## அருட்புகழ் ஓதுதல்

களித்த போது எல்லாம் நின்இயல் உணர்ந்தே
களித்தனன்! கண்கள்நீர் ததும்பித்
துளித்த போது எல்லாம் நின்அருள் நினைந்தே
துளித்தனன்! சூழ்ந்தவர் உளத்தைத்
தெளித்த போது எல்லாம் நின்திறம் புகன்றே
தெளித்தனன்! செய்கைவேறு அறியேன்;
ஒளித்திரு உளமே அறிந்தது! இவ்வனைத்தும்
உரைப்பதுஎன் அடிக்கடி உனக்கே?

என்றபடிச் சதா ஆண்டவன் அருட்புகழை எடுத்து மக்கட்கு ஓதி வந்தார்கள். மக்கள் தெளியும்படிச் செய்வித்துத் திகழ்ந்திருந்தார்கள்.

## எதற்கும் விளக்கம்

அப்போது வள்ளல் பெருமான் சோதிடம், மந்திரம், வைத்தியம், மூலிகை, இலக்கணம், இலக்கியம், வேதாந்தம், சித்தாந்தம், குளிகை, மணி முதலாக உள்ள எந்த விடயங்களைப் பற்றி அறிய எண்ணுகின்றனரோ, அவைகளைப் பற்றியெல்லாம் முதலிலிருந்து முடிவுவரை நாள் முழுதும் பிரசங்கித்தும், இன்னும் விரிக்கில் பெருகும் என்பார்கள்.

## தூய திருமேனி

ஒருநாள் அன்பர்கள் வள்ளற்பெருமான் திருவுருவத்தைப் புகைப்படத்தில் பிடிக்கவேண்டும் என்று விரும்பினர். ஆதலின் சென்னையில் பிரபலமாய் இருந்த மாசிலாமணி என்பவரைக் கொண்டு எட்டுத்தரம் பிடிக்கச் செய்தனர். ஒன்றிலேனும் திருமுகமும், திருக்கரமும், திருவடிகளும் விழவில்லை. வெள்ளை வேட்டி மாத்திரம் விழுந்தது. அதைக்கண்டு மனம் வருந்தினர். தூய திருமேனியின் தன்மையை உணர்ந்தனர்!

### பொன்னுன மேனி

இதை உற்று நோக்கியிருந்தார் பண்ணுருட்டி குயவர் ஒருவர். அவர் ஐயா அவர்களிடம் அன்பு பூண்டவர். பெருமானைக் கண்ணுற்றவாறு மண்ணல் உ ரு வ ம் அமைத்தார்; வேண்டும் வண்ணமிட்டார்; கொண்டுவந்து பெருமானிடம் கொடுத்தார். அவர்கள் அதை, பொன்னுன மேனி மண்ணு யிற்றே! என்று கூறிக் கைவிட்டார்கள். அவரே பிறகு வேறு ஒன்று அமைத்து, அதுகொண்டு புகைப்படம் எடுத்ததாக உளது தற்போது சில உருவங்கள் !

### கூடியவரை ஒத்துள்ளது

அநேக வருடங்களுக்கு முன் திருவொற்றியூர் சுவாமிகள் மடத்தில் ஒரு ஆயில் பெயிண்ட் செய்த படம் காணப்பட்டது. அதிலிருந்து ஐயா அவர்கள் உட்கார்ந்திருப்பது போல் ஒரு படம் பிடிக்கப்பட்டது. அதுவே பலரிடமும் காணப்படுகிறது. கூடிய வரையில் பெருமானை ஒத்திருப்பதாகப் பலர் சொல்லக் கேள்வி !

### சுத்த ஞானி

ஐயா அவர்கள் நடக்குங்கால் எதனுலும் தடையுருது நடப்பார்கள். ஓர்கால் கூடலூர் ஐயாசாமியுடன் வெயிலில் நமது பெருமான் நிற்க நேரிட்டது. அப்போது பெருமான் சுத்த ஞானிக்கு என்னங்காணும் அடையாளம்? என்று வின வினர்கள். அவர் சொல்லத் தெரியாது விழித்தார். நிழற் சாயை இருக்கக் கூடாது! என்று உணர்த்தினர்கள். அதுவரை யாரும் கவனியாமல் இருந்த ஓர் சத்தியசுத்தஞானஅனுபவத்தின் பெருமையை அவருக்கு உணர்த்தினர்கள். அதனல் நம்பெருமானின் தேகம் மூவகைச் சித்தியும் பெற்ற பெருநிலை அப்போது புலனுயிற்று.

### தயவின் விரிவு

ஒருகால் மேட்டுக்குப்பத்தில் நெடுநேரம் ஜீவகாருண்யத்தைக் குறித்துச் சில அன்பர்கள் வாசா ஞானமாய்ப் பேசிக் கொண்டிருந்தார்கள். அதனை அறிந்தார்கள் வள்ளல். ஜீவ காருண்யம் எவ்வளவு தூரம் பரந்துள்ளது; அறிவீர்களா? என்று கேட்டார்கள். கேட்டுவிட்டுத் தெருவில் பெரியோர்

இருவர் சென்றனர். அப்போது ஒருவர் கால்பட்டு ஒருமண் கட்டி உடைந்துவிட்டது. அதைக்கண்டமற்ருெருவர் மூர்ச்சை யாஞர். மற்ருெரு பெரியவர் மூர்ச்சையானவரைக் காரணம் கேட்டார். உமது காலிஞல் மண்கட்டியின் இயற்கை நிலை யாகிய நேர்த்தி குலைந்து விட்டது தான் என்றனர்! என்று ஜீவகாருண்யத்தின் எல்லையை விளக்கிஞர்கள்.

## தோத்திரம் செய்யுங்கள்

ஒருநாள் பிரசங்கத்தில் வள்ளற் பெருமான் இந்தக்கலியு கத்தில் யோகம் முதலிய சாதனங்கள் அனுசரிப்பது இயலாத காரியம். ஆதலின் தோத்திரம் செய்யுங்கள் என்று,

நீடுகின்ற மாமறையும் நெடுமாலும்
திசைமுகனும் நிமல வாழ்க்கை
நாடுகின்ற முனிவரரும் உருத்திரரும்
தேடஅருள் நாட்டங் கொண்டு
பாடுகின்ற மெய்யடியர் உளம்விரும்பி
ஆனந்தப் படிவம் ஆகி
ஆடுகின்ற மாமணியை ஆரமுதை
நினைந்துநினைந்து அன்பு செய்வாம். -என்னும்

பாட்டில் குறிப்பிட்டபடி உய்யும்நெறி உணர்த்திஞர்கள்.

## திருத்தி விடுவோம்; அஞ்சவேண்டாம்!

திருவருட் பிரகாசப்பெருமான் திருக்காப்பிட்டுக் கொள் வதற்குச் சில நாள்களுக்கு முன் அன்பர்களை நோக்கிஞர்கள்.

''நம்மோடு கூடிப் பழகியவர்களையும் பின்பு கேள்வியால் விரும்புகின்றவர்களையும் கைவிடமாட்டோம். ஆணை! ஆணை!'' என்று உறுதி கூறியருளிஞர்கள்.

உலக அறிவு எனக்கு இங்கு உற்றநாள் தொடங்கி
உன் அறிவு அடையும் நாள் வரையில்
இலகி என்ஞேடு பழகியும் எனைத்தான்
எண்ணியும் நண்ணியும் பின்னர்
விலகிய மாந்தர் அனைவரும் இங்கே
மெய்யுறக் கூடி நின்று உனையே
அலகில் பேரன்பில் போற்றி வாழ்ந்திடவும்
அடியனேற்கு இச்சைகாண் எந்தாய்!

என்று நம்பெருமான் பாடியபடி;

இவ்வண்டத்தில்,
எங்கெங்கு சென்ருலும்;
அங்கங்கு இருப்போம்!
திருத்தி விடுவோம்; அஞ்ச வேண்டாம்!

என்றும் ஆறுதல் உரைத்தருளிஞர்கள்.

## பேரவாவும் பேராற்றலும்

ஆதியும் நடுவும் அந்தமும் இல்லா
அருட்பெருஞ் ஜோதிஎன் உளத்தே
நீதியில் கலந்து நிறைந்தது; நானும்
நித்தியன் ஆயினேன்; உலகீர்!
சாதியும் மதமும் சமயமும் தவிர்த்தே
சத்திய சுத்த சன்மார்க்க
வீதியில் உமைத்தான் நிறுவுவல்: உண்மை
விளம்பினேன் வம்மினே விரைந்தே!

என்று உலகரை நோக்கி உரைத்திட்டார்கள்.

எல்லார்க்கும் கடையாகி
இருந்தேனுக்கு அருள்புரிந்தே
எல்லார்க்கும் துணையாகி
இருக்கவைத்தாய்; எம்பெருமான்!
எல்லார்க்கும் பொதுவில் நடம்
இடுகின்ருய்; இவ்வண்ணம்
எல்லார்க்கும் செய்யாமை
யாதுகுறித்து? இசைஎனக்கே!

என்று உண்மையை விளக்கியருளிஞர்கள்.

உலகுக்கு

அன்னேஎன விளையாடுக! என்று அதீத செழும்பசும்
பொன்நேர் வடிவு கொடுத்தனே! -என்று

இறைவன் தனக்கிட்ட பணியையும் மொழிந்தருளிஞர்கள்.

எனேஅடுத்தார் சுகம் வாய்ந்திடல் வேண்டும்
எவ்வுயிரும் இன்படைதல் வேண்டும்!

என்று, தம்மை உற்றவர்களேயும் மற்றவர்களேயும் ஒருங்கே திருத்தி சன்மார்க்கப் பெருநெறி பற்றி உய்யக் கொள்ளும்

பேரவாவும்; அதை நிறைவேற்றும் பேராற்றலும் ஒருங்கே நிறையப் பெற்று விளங்கினர்கள்.

## கொதிக்கும் நீர்

அப்பொழுது சுவாமிகள் சித்திவளாகத் திருமாளிகையில் யில் சில நாட்கள் தொடச்சியாகச் சிவானுபவத்தில் திளேப்ப தும், பின் வெளிவந்து பிரசங்கம் செய்வதும் வழக்கமாய் இருந்தது. பெருமானுக்குக் கருங்குழியில் தங்கியிருந்த போதி லிருந்து, சாலேயிலும் மேட்டுக்குப்பத்திலும் அணுக்கத்தொண் டராய் இருந்து, பணியாற்றி வந்தவர் புருடோத்தமர். அவர் ஜலத்தை ஐந்தில் மூன்று பங்கு சுண்ட இரண்டு பங்கு நிற்கக் காய்ச்சிச் சர்க்கரை கலந்து கொதிக்கும் வெந்நீரைக் கொற டாவினல் பிடித்துக் கொண்டுபோய் கொடுப்பதும், அதைச் சுவாமிகள் கையால் வாங்கிக் குடிப்பதும் கடைசி காலங்களில் வழக்கமாக இருந்தது.

## நின்மல தேகம்

முன்கூறியபடி நமது பெருமான் பிற்பகுதியில், கொதிக் கும் நீரும் வேண்டாத நிலேயில் விளங்கினர்கள். அது அனு பவ மாலே பாட்டால் தெரிகின்றது.

அன்னம் உண அழைக்கின்ருய் -என்பது அப்பாட்டு.
அதில்- பசி சிறிதும் கண்டிலன் உள் அகத்தே-என்றும்
கள்உண்டாள் எனப்புகன்ருர் கனகசபை -எனும் பாவில்
ஈங்குசிலர் உண்ணுக என்றென்னே அழைக்கின்ருர்

என்றும் குறிப்பனவற்ருல் அவர்கள் பசி, தாகம், மரணம், பிணி, மூப்பு, பயம் என்னும் அவத்தைகள் எல்லாம் ஒழிந்து, நின்மல தேகியாக சித்திவளாகத்தில் விளங்கினர்கள் என்பது புலனுகும்.

## பரிபூரண அருள்விளக்கம்

கதிர்நலம் என்இரு கண்களில் கொடுத்தே
அதிசயம் இயற்றெனும் அருட்பெருஞ் ஜோதி!
அருள்ஒளி என்தனி அறிவினில் விரித்தே
அருள்நெறி விளக்கெனும் அருட்பெருஞ் ஜோதி!
பரைஒளி என்மனப் பதியினில் விரித்தே
அரசது இயற்றெனும் அருட்பெருஞ் ஜோதி!

என்று பரிபூரண அருள்விளக்கம் ஆன்ம ஆலயமாகிய தமது தேகத்தில் காரியப்பட்டும், காரியகாரணப்பட்டும், காரணப்

பட்டும் விளங்கும் தன்மையையும் முறையையும் பெருமான் விளக்கியளினார்கள்.

## சன்மார்க்கக்கொடி

இவ்வண்ணம் விளங்கும் பெருமான் 1873ஸ்ரீமுக வருடம் ஐப்பசி 7ம் தேதி காலை 8மணிக்கு மேட்டுக்குப்பம் சித்திவளாகத் திருமாளிகையில் முதன்முதல் மேலே கால்பாகம் மஞ்சள் நிறமும், முக்கால் பாகம் வெண்மை நிறமும் உள்ள கொடி கட்டுவித்தருளினார்கள்.

அக்கொடியின் உண்மையையும், சத்விசாரம் செய்ய வேண்டிய முறையையும், திரையின் வண்ணங்களையும், இனி நடக்கவேண்டிய முறைகளையும், தயவின் மேன்மையையும் விரிவாக மக்களுக்கு மகா உபதேசமாக அப்போது வெளிப் படுத்தினார்கள்.

## முற்பகுதியின் ஏக்கம்

திருவருட் பிரகாச வள்ளலாய்த் திகழும் நம்பெருமான் முற்பகுதியில்,

பித்தெலாம் உடைய உலகர்தம் கலகப்
பிதற்றெலாம் என்று ஒழிந்திடுமோ?
சத்தெலாம் ஒன்றென்று உணர்ந்த சன்மார்க்க
சங்கம் என்று ஓங்குமோ? தலைமைச்
சித்தெலாம் வல்ல சித்தன் என்று உறுமோ;
தெரிந்திலேன்? என்றும்;
ஒன்றுஎனக் காணும் உணர்ச்சி என்று உறுமோ?
ஊழிதோறு ஊழி சென்றிடினும்
என்றும் இங்கு இறவா இயற்கை என்று உறுமோ?
இயல் அருள் சித்திகள் எலாம் வந்து
ஒன்றல் என்று உறுமோ? அனைத்தும் என்வசத்தே
உறுதல் என்றோ? என்றும்;

ஏக்கமுற்றுப் பாடியருளினார்கள் !

## பிற்பகுதியின் பேறு

கள்ள வாதனையைக் களைந்து அருள்நெறியைக்
காதலித்து ஒருமையில் கலந்தே
உள்ளவாறு இந்த உலகெலாம் களிப்புற்று
ஓங்குதல் என்று வந்து உறுமோ!

என்று குறிப்பிட்டு அருளியபடி,

முத்தியைப் பெற்றேன்; அம்முத்தியினல் ஞான
சித்தியை உற்றேன் என்று உந்தீபற;
சித்தனும் ஆனேன் என்று உந்தீபற!

என்றபடி, அருள் வல்லபம் பெற்று, எல்லாம் வல்ல அருட் பெருஞ் சித்தராய்த் திகழ்ந்தார்கள். கர்மசித்தி, யோகசித்தி, ஞானசித்திகள் அனைத்தும் சித்திக்கப் பெற்று விளங்கினர்கள்.

எல்லா உலகமும் என்வசம் ஆயின;
எல்லா உயிர்களும் என் உயிர் ஆயின;
எல்லா ஞானமும் என்ஞானம் ஆயின;
எல்லா வித்தையும் என்வித்தை ஆயின;
எல்லாப் போகமும் என்போகம் ஆயின;
எல்லா இன்பமும் என்இன்பம் ஆயின;
எல்லாம் வல்ல சிற்றம்பலத்து என் அப்பர்
எல்லாம் நல்கி என்உள்ளத்து உள்ளாரே!

என்றபடி, சர்வ அண்ட சராசரங்கள் எல்லாம் தம்வசத்து இயங்கும் வல்லமையினை இறைவன் அளிக்கப் பெற்றுத் திகழ்ந்திட்டார்கள்.

**அருளாட்சி புரிந்தருளல்**

ஆணை ஆணை நீ அஞ்சலை, அஞ்சலை;
அருள் ஒளி தருகின்றும்;
கோணை மாநிலத்தவர் எலாம் நின்னையே
குறிக்கொள்வர்; நினக்கே எம்
ஆணை அம்பலத்து அரசையும் அளித்தனம்;
வாழ்கநீ மகனே என்று
ஏணை பெற்றிட எனக்கருள் புரிந்தநின்
இணைமலர்ப் பதம் போற்றி!

என்றபடி ஷடாந்த சமரச சுத்த சன்மார்க்கம் எல்லா உலகங்களிலும் விளங்கச் செய்யும்படிக்கு ஆண்டவன் தன் அருள் ஆட்சியையே தம்வசம் அளிக்கப் பெற்று விளங்கினர்கள்.

அருள்ஜோதி ஆனேனென் றறையப்பா முரசு
அருள் ஆட்சி பெற்றேனென் றறையப்பா முரசு
மருள்சார்பு தீர்ந்தேனென் றறையப்பா முரசு
மரணம் தவிர்ந்தேனென் றறையப்பா முரசு

என்று அருள்முரசு அடித்து தான் அருளாட்சி ஏற்றுக் கொண்டதைத்தெரிவித்திட்டடார்கள்.

**அருட்செல்வம் எங்கும் பெருகச் செய்தருளல்**

இல்லாமை எனக்கில்லை எல்லார்க்கும் தருவேன்;
என்னுடைய பெருஞ்செல்வம் என்புகல்வேன் அம்மா!
செல்லாத அண்டமட்டோ? அப்புறத்து அப்பாலும்
சிவஞானப் பெருஞ்செல்வம் சிறப்பது கண்டறியே!

என்று தாம்பெற்ற பெருஞ்செல்வத்தைக் குறிப்பிட்டு, அதனை எங்கும் பெருகச் செய்வோம் என்று உரைத்தருளினர்கள்.

**அருளாட்சி சூடி அருளல்**

முன்னரசும் பின்னரசும் நடுவரசும் போற்ற
முன்னும் அண்ட பிண்டங்கள் எவற்றினும் எப்பாலும்
என்னரசே என்று உரைக்க எனக்கு முடிசூட்டி
இன்பவடிவு ஆக்கி என்றும் இலங்கவைத்த சிவமே!

என்று குறிப்பிட்டவாறு அருளாட்சியின் மணிமுடியும் சூட்டப் பெற்றுத் திகழ்ந்திட்டார்கள்.

**அருட்செங்கோல் செலுத்தியருளல்**

நாய்க்கும் ஓர் தவிசிட்டுப் பொன்மாமுடி
நன்று சூட்டினை -என்றும்;

தவளமாடப் பொன்மண்டபத்து ஏற்றியே! - சேய்க்கு
நேரஎன் கையில் பொன் கங்கணம் திகழக் கட்டினை.

என்றும், குறித்தபடி கையில் பொன் கங்கணம் கட்டப்பெற்ற வர்களாய் ஒளிர்ந்திட்டார்கள்.

பேருலகெலாம் மதிக்கத் தன்பிள்ளைஎன்று என்னைப்
பெயரிட்டு அழைத்தே -என்றும்;
தன்ஏவல் செய்பிள்ளை ஆக்கிற்று பாரீர்! -என்றும்;
வருவித்த வண்ணமும் நானேஇந்த
மாநிலத்தே செயும்
வண்ணமும் தானே தெரிவித்து அருளிற்று பாரீர்!

என்றும்; உலகம் படைத்தல் முதல் ஐந்தொழிலும், ஞானம் படைத்தல் முதல் ஐந்தொழிலும், ஐந்து பட்சங்களிலும் விளங்கும் ஐந்தொழில் கருத்தர்களும் மூர்த்திகளும்;

ஞான அனுபவ பேதமாக விளங்கும் பெரிய பிரமாதியர் என விளங்கும் ஒன்பது கோடித் தலைவர்களும்;

இதற்குமேல் விளங்கும் சத்தி சத்தர்களும்;

தம்கடைக்கணிப்பில் குற்றேவல் புரிய ஒப்பு உவமையற்ற ஒருபெரு நிலையில் அருட்செங்கோல் செலுத்திடும் பெரும் பேறும் பெற்றிட்டார்கள்!

**நிச்சயித்துக் கூறல்**

கண்கண்ட பூதலம் எல்லாம் சன்மார்க்கம்
கலந்துகொண்டே
பண்கொண்ட பாடலில் பாடிப் படித்துப் பரவுகின்றார்
விண்கொண்ட சிற்சபை ஒன்றே நிறைந்து
விளங்குகின்றது;
எண்கொண்ட மற்றை மதமார்க்கம் யாவும்
இறந்தனவே!

என்று சன்மார்க்கத்திற்குத் தடைகளாக உள்ள சமய மத மார்க்கங்களும், சாதி, குலம், கோத்திரம் முதலானவைகளும் அடியோடு இறந்தனவே எனப்பாடிப் பரவினார்கள், சிற்சபை ஒன்றே நிறைந்து விளங்குகின்றது, என்று கூறினார்கள்.

**வாய்ப்பறை ஆர்த்திடல்**

சர்வ உலகங்களையும் வாயே பறையாகக் கொண்டுஆர்த்து அழைத்திட்டார்கள்.

வையகத்தீர்; வானகத்தீர்; மற்றகத்தீர்! நுமது
வாழ்க்கைஎலாம் வாழ்க்கைஎன மதித்து மயங்காதீர்;
மையகத்தே உறுமரண வாதனையைத் தவிர்த்த
வாழ்க்கையதேவாழ்க்கைஎனமதித்துஅதனைப்பெறவே
மெய்யகத்தே விரும்பியிங்கே வந்திடுமின்! எனது
மெய்ப்பொருளாம் தனித்தந்தை இத்தருணம் தனிலே
செய்யகத்தே வளர்ஞான சித்திபுரம் தனிலே
சித்தாடல் புரிகின்றார் திண்ணம்இது தானே!

என்று அறிவுறுத்தினார்கள்.

**உடன் எழும்படி உணர்த்தல்**

நான்உரைக்கும் வார்த்தைஎலாம்நாயகன்தன் வார்த்
தை நம்புமினோ; நமரங்காள்! நல்தருணம் இதுவே;
வான்உரைத்த மணிமன்றில் நடம்புரிஎம் பெருமான்
வரவுஎதிர் கொண்டவன் அருளால் வரங்களெலாம்
பெறவே
தேன் உரைக்கும் உளம்இனிக்க எழுகின்றேன், நீவிர்
தெரிந்தடைந்தென்உடன்எழுமின்;சித்திபெறல்ஆகும்

என எல்லோரையும் தம்முடன் எழக்கூவி அழைத்தார்கள்.

## சத்தியநெறி சுட்டுதல்

ஆகமாந்தமும் வேதத்தின் அந்தமும் அறையும்
பாகமாம் பரவெளி நடம்பரவுவீர் உலகீர்!
மோக மாந்தருக் குரைத்திலேன்; இதுசுக முன்னும்
யோக மாந்தருக்குக் கால முண்டாகவே உரைத்தேன்
என்றும்;

ஆறு கோடியாம் சமயங்கள் அகத்தும் மற்றைய
ஆறந்தத்தும் சிவம்ஒன்றே;அன்றி வேறு கண்டிலேன்
என்றும்;

கொலை விரும்புவீர் எனில்புறத்து ஏகுமின் குலைந்தே என்றும், கூறிச் சத்திய நெறியை உணர்த்தினார்கள். அனைவரும் உய்யும் நெறியையும் காட்டினார்கள்.

என்னை அடைந்திடுமின்! என்மார்க்கம்
இறப்பொழிக்கும் சன்மார்க்கம் தானே!

என்று கூவியும் அழைத்திட்டார்கள்.

## அருள் சத்தியை மணம்புரிதல்

1. எவ்வுலகும் தன் ஆணையின்கீழ் விளங்கி உய்யவும்;
2. ஞான சிங்காதன பீடத்து அமர்ந்து அருட்பெரும் தலத்து மேல் நிலையில் அருட்செங்கோல் செலுத்திடவும்;
3. அருளாட்சி புரிந்து அருட்பெரும் போகம் சர்வ சுதந்தரத்துடன் துய்த்தற் பொருட்டாகவும்;

''அருள்சத்தியை எவ்வுலகும் அறிய மணம் புரிவிப்பாம்'' என்று தனித்தந்தை வாய்மலர்ந்ததாக 6ம் திருமுறை பேறடைவில் உரைத்தருளினார்கள்.

மணம்புரி கடிகை இரண்டரை எனும்ஓர்
வரைஉளது ஆதலால் மகனே!
எணம்புரிந்து உழலேல் சவுளம் ஆதிய செய்து
எழிலுறு மங்கலம் புனைந்தே
குணம்புரிந்து எமது மகன்எனும் குறிப்பைக்
கோலத்தால் காட்டுக எனவே
வணம்புரி மணிமா மன்றில் என்தந்தை
வாய்மலர்ந்து அருளினர் மகிழ்ந்தே!

என்றும்;

கலங்கிடேல் மகனே; அருள் ஒளித்திருவைக்
களிப்பொடு மணம்புரிவிப்பாம்!

விலங்கிடேல் வீணில் போது போக்காமல்
விரைந்து நன்மங்கலக் கோலம்
நலங்கொளப் புனைந்து மகிழ்க ! இவ்வுலகர்,
நவிலும் அவ்வுலகவர், பிறரும்
இலங்கநின் மணமே ஏத்துவர் என்றார்:
இயலுறு சிற்சபையவரே !
என்றும், அவ்வாறு விளக்கியபடியே:

எவ்வுலகும் அறிய அருள்சத்தியை மணம் புரிவிப்பதாகவும், தம்திருமணத்தையே எவ்வுலகரும் ஏத்துவர் என்றும், அது இரண்டரை கடிகை எல்லையில் நிகழும் என்றும், அவ்விரண்டரை கடிகைக்குள் சவுளம் (முடிகழித்தல்) ஆதிய செய்து எழிலுறு மங்கலக் கோலம் புனைந்து விளங்கும்படி தம்தந்தை அருளிச் செய்ததாக வெளியிட்டார்கள்.

அவ்வாறே கையில் கங்கணம் விளங்கக் காட்சியளித்தார்கள். மேலும், சித்திவளாகத் திருமாளிகை முற்றத்தே வெகு விமரிசையாகத் திருமணப் பந்தலிட்டார்கள் !

அனைத்துலகும் விரும்பும்படி தோரணம், கொடிகள் பழுத்த குலைவாழை, விரைக்கமுகு, தெங்கிளநீர், கரும்பு, நெல்லின் முளை, நிறைநீர்க்குடம், இணைந்தகயல், கண்ணடி முதலிய சர்வ மங்கலங்களும் விளங்க அலங்கரிக்கச் செய்திட்டார்கள். தாம் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரின் திருக்குமாரர் என்னும் குறிப்பைக் கோலத்தால் எவ்வுலகும் அறிய தம் திருமணமே ஏத்தும் வண்ணம் காட்சியளித்து விளங்கியருளினார்கள்.

## மூவகை நிலையங்கள்

இவ்வண்ணம் உண்மையை உணரும் பொருட்டு சொற்பொழிவாலும், சாத்திரம் நிறைந்த தோத்திரங்களாலும் விளக்கியருளினார்கள்.

1 சத்திய தருமச்சாலை யென்னும் தருமஸ்தானம்:

2 சத்திய ஞானசபை யென்னும் தெய்வஸ்தானம்:

3 சித்திவளாக மென்னும் குருஸ்தானம்: என்றுஉண்மை உணர்வால் போற்றப்படும் மூவகைத் தாபனங்களையும் அகத்தும் புறத்தும் இந்த உலகம் உள்ளனவும்; அதற்குஅப்பாலும், சத்திய நிலையையும் நெறியையும் இன்பத்தையும் திறம்பெற விளங்கி வீற்றிருக்கும் பொருட்டு தாபித்திட்டார்கள்.

### ஒருவரும் தேறிலர்

இவற்றை எல்லாம் செய்தருளிய பின்பு மக்களை நோக்கினார்கள்:

''இதுவரை உங்களுக்கு நேரில் சொல்லி வந்தோம்; கேட்டுத்திருந்தி உடன் எழும் திறத்தில்ஒருவரேனும் தேறிலர் கடைவிரித்தோம்; கொள்வார்இல்லை; கட்டிவிட்டோம்;ஆனால் அச்சில் வார்ப்போம்; ஆகாவிடில் மிடாவில் வார்ப்போம்! இப்போது இவ்வுடம்பில் இருக்கின்றோம்; இனி எல்லா உடம்பிலும் புகுந்து கொள்வோம்; இவ்வண்டத்தில் எங்கு எங்கு சென்றாலும் அங்கு அங்கும் இருப்போம்; திருத்திவிடுவோம்; அஞ்சவேண்டாம்!'' என்று ஆதரவு அருளினார்கள்.

### சத்திய ஞான தீபம்

அத்துடன் 1873 ஸ்ரீமுக வருடம், கார்த்திகை மாதம் பருவத்தன்றுதாம் எழுந்தருளி இருந்த திருவறையுள் துலங்கி என்றும் தடைபடாது விளங்கிய சத்திய ஞான தீபத்தைச் சித்திவளாகத் திருமாளிகை வாயில் புறத்தே அமைத்தருளினார்கள். திருவாயில் கதவைச் சாத்தித் தாளிட்டார்கள்.

''இனி நீவிர்கள் எல்லாம் ஆண்டவன் இந்தத் தீபமுன்னிலையில் விளங்குகின்ற படியால் எல்லாம் வல்ல தலைவனை 6 காலங்களிலும் கொலை புலை அற்றநன்னெறியில்நின்று, ஒழுக்கம் நான்கினும் பழகிக் கைவரச் சாதித்து நிராதரவான ஏழைகளுக்கும் மற்றையர்க்கும் பசிப்பிணியாற்றி ''நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து' என்னும்பாட்டில்கண்டவாறு அன்புடன் போற்றி உய்யுங்கள்'' என்று கூறியருளினார்கள்.

### சிவானந்தத்தில் திளைத்திடல்

பின் அனைவர்க்கும் கடைக்கண் நோக்களித்து உலகுக்கு அன்னை எனத் திருமாளிகை அறையுள் தெய்வீக வண்ணம் பொங்கி ஓங்கச் சிவானந்தத்து அழுந்தி நின்றிட்டார்கள்.

சில சமயம் வடவாயிற்படி வழியே வெளியே சென்று திரும்புவதும், உள் முகத்து அமர்வதுமாக விளங்கினார்கள். பின்பு ஒருமுறை ஞானசபை விளக்கப் பத்திரிகை ஒன்று வரைந்து வெளியிட்டார்கள்.

### அருள்மயமாகவே விளங்கும் முற்பகுதிப் பேறு

இவ்வண்ணம் திருவருள் பேற்றில் திளைத்து வள்ளற்பெருமான் விளங்கினார்கள்.

உலக அறிவு எனக்கு இங்கு உற்றநாள் தொடங்கி
உன் அறிவு அடையுநாள் வரையில்
இலகி என்னேடு பழகியும் எனைத்தான்
எண்ணியும் நண்ணியும்

என்று குறிப்பிட்டபடி நம்போல் இருள்வடிவில் திகழ்ந்திடும் அசுத்த பொறிகளும், புலன்களும், கரணங்களும் கொண்டு பார்ப்பது, கேட்பது முதலாக உள்ள பெத்தர்கள், அருள்வடி வில் திகழ்ந்து, அருள்மயமாகித் தாம் பார்த்தல், கேட்டல் முதலாய கருவி கரணங்கள் யாவும் அவ்வருள் மயமாகவே விளங்கும் பரம முத்தராகிய ஞானசித்தர்பால் அணுகி, அன் னுருடன் பழகி, அவருடன் எண்ணியும் நண்ணியும் உழல்தல் முற்பகுதியில் தான் கைகூடும் என்று தெரிகின்றது.

## காணக் கிட்டாப் பிற்பகுதிப் பேறு

பிற்பகுதியில் கடவுளின் இயற்கை உண்மையாம் மெய் அறிவே வடிவாகி, அதீதா அதீதத்தில் தனித்துப் பேரின்ப லாபம் எனக் குறிக்கப்பட்ட யாவும் தாமாக, எவ்வுயிர்க்கும் உயிராய்ச் சின்மயமாய்த் தன்மயமாய்ச் சுத்த சிவமயமாய்ப் பரிபூரண சுகாதீதத்தில் திளைத்து அழுந்துங்கால் நம் போன்ற வர்கள் ஊனக்கண்ணல் கண்டு, களித்து, அவர் சொல்லேக் கேட்டு, மகிழ்தலும் கிட்டாதாகும் என்பது உய்த்து உணரும் நிலையாக உளது. இதுவே பேரருள் நிலையின் பிற்காலப் பேறு

## தம்போல் ஆம் பேறு

ஆதலால் நான் என்றும் தான் என்றும் நாடாத நிலே யில், ஞான வடிவாய் விளங்கும் ஓர் வான நடுநிலேயில் நின்று காலவரை உரைப்பவெலாம் கடந்தே, திருத்தியொடு விளங்கி உலகமெலாம் தம்போலாகும் பேறு பெறுவிப்பதற்காக நம் பெருமான் அருள்ஆடல்ஒழியாது இயற்றும் பேரருள் நோக்கு உடையராய் விளங்கி நிற்கின்றூர்கள்.

## நற்றுயாக விளங்கிய பேறு

தம்மைச் சூழ்ந்துள்ளார்க்குத் தாம் தோன்றுத் துணேயாக விளங்கலே ஆற்றுது ஏங்குவரே என்பதை;

வாய்மணக்குற மனம்எலாம் மணக்க
வையகம் வானகம் மற்றுள மணக்கத்
தூய்மணத்த மாமறைமுடி மணக்கத்

தூய ஆகமத் தொல்சிரம் மணக்கத்
தாய் மணக்குறும் கருணையினுய்! என்
தலைமணக்குறத் தரித்த பூங்கழல்கள்
ஏய்மணத்த சண்முக சிவகுருஓம்!
இராமலிங்கஓம்! சிவாய சற்குருஓம்!

என்று முதல் மாணவர் தொழுவூரார் பாடியவாறு, ஓர் ஆயிரம் தாயினுள் நற்ருயாக விளங்கியருளினுர்கள்.

## எவ்வுலகிற்கும் விளையவிருக்கும் பெரும்பேறு

அதன்படித் தம் அருள்மனம் தேற்றும் முறையாக பெருமான்;

கருநாள்கள் அத்தனையும் கழிந்தன நீ சிறிதும்
கலக்கமுறேல்;இதுதொடங்கிக்கருணை நடப்பெருமான்
தருநாள்; இவ் உலகம்எலாம் களிப்படைய நமது
சார்பில் அருட்பெருஞ் ஜோதி தழைத்துமிக விளங்கும்
திருநாள்களாம்; இதற்குஓர் ஐயமில்லை? இதுதான்
திண்ணம்! இதை உலகறியத் தெரித்திடுக மகனே!
வருநாளில் உரைத்திடலாம் எனநினைத்து மயங்கேல்
வருநாளில் இன்பமயம் ஆகி நிறைவாயே!

என்றும்,இன்னும் பலவாருகத்தம்மால் எவ்வுலகிற்கும் விளைய இருக்கும் பெரும்பேற்றினை விளக்கி அருள்கின்ருர்கள்.

## திருக்காப்பிடக் கட்டளையிடல்

இவ்வாறு நமக்கெல்லாம் ஆறுதல் மொழி கூறி;

பிச்சுலகர் மெச்சப் பிதற்றிநின்ற பேதையனேன்
இச்சைஎலாம் எய்த இசைந்தருளிச் செய்தனையே!
அச்சம்எலாம் தீர்ந்தேன்; அருளமுதம் உண்கின்றேன்
நிச்சலும் பேரானந்த நித்திரை செய்கின்றேனே!

என்று திருவாய் மலர்ந்து, சித்திவளாகத் திருமாளிகையில் வள்ளல் அமர்ந்திருந்த அறையில், அடியில் குறுக்குச் சட்டம் மாத்திரம் உடைய, உயரம் இல்லாத ஓர் பலகையில் கீழ்மேல் திசையாக வடக்கு நோக்கி இடக்கை தலையில் தாங்க திருப்பள்ளியில் 30-1-1874, ஸ்ரீமுக வருடம் தைமாதம் 19ம் தேதி வெள்ளிக்கிழமை புனர்பூசத்தன்று இரவு 12மணிக்குக் கடகத்தில் சந்திரனும் சூரியனும் பூரணமாக விளங்கும் ஞானநிறைவைக் குறிக்கும் நன்னுளில் தாம்அமர்ந்துகொண்டு கதவைத் திருக்காப்பிடும்படிக் கட்டளையிட்டார்கள்.

## குருவாணையை நிறைவேற்றல்

அன்பர்கள் கதவைச் சாத்தியபடியே விட்டனர். இடையில் சிறிது விலக்கிப் பார்ப்பதும், சாத்தி விடுவதுமாக இருந்தனர். அப்போது பெருமான் திருவுரு தோன்றியும் தோன்றுமலும் குறுகியும் தோன்றுவது கண்டனர்! அதனுல் குருவாணையை மீறி நடந்தோமே என்று அஞ்சிய உளத்தினர் ஆயினர். 4-2-1874ல் தைமாதம் 23ம்தேதி வேறு பூட்டிட்டுக் கதவைப் பூட்டினர்.

## ஆண்டவர் காட்டிக் கொடார்

சுவாமிகள் கடைசியாகத் தாம் திருக்கதவை மூடியிருக்குங்கால், ''அரசாங்கத்தினர் திறக்கும்படி ஆக்கினை தரின் ஆண்டவர் அருள் செய்வார். ஆயினும் உள்ளே பார்க்கின் வெறும் வீடாகத்தான் இருக்கச் செய்வார். என்னைக் காட்டிக் கொடார்'' என்று அருளினுர்கள்.

## ஆட்சித் தலைவர் வருகை

சித்திவளாகத்தில் வள்ளல் திருக்காப்பிட்டுக் கொண்ட பின்பு, சில நாள் கழித்து கலெக்டர், தாசில்தார், பெரிய டாக்டர் ஆகிய மூவரும் வள்ளற்பெருமான் திருக்காப்பிட்டுக் கொண்ட விடயம் அறிய வந்தனர்! வந்து திருமாளிகையை இரண்டொரு முறை சுற்றிப் பார்த்து, ஆட்சேபத்திற்கு யாதொன்றும் காணப்படாமையால், ''வள்ளலார் நிட்டையில் இருப்பர்''என்று தீர்மானித்துத் திரும்பினர்.

## வெறும் வீடு

நம்பெருமான் ''திருக்காப்பிட்டுக் கொண்ட திருஅறை திறந்து பார்க்கில் வெறும் வீடாகத்தான் ஆண்டவர் இருக்கச் செய்வார்'' என்றல்லவா திருவாய் மலர்ந்தார்கள்! அதன்படி படுத்திருந்த பலகைதான் உள்ளே சந்தனக் காப்பிடப்பட்ட நிலையில் இன்றும் விளங்குகின்றது.

## பெருமான் எங்குற்ருர்கள்?

வள்ளற் பெருமான் எங்குற்ருர்கள்? எவ்வண்ணம் திகழ்கின்ருர்கள்? இதுபற்றி அவர்கள் திருவாய் மலர்ந்து அருளிய பாடல்களாலும், விண்ணப்பங்களாலும், அறிவுரைகளாலும் விளங்கிடலாம்; ஜீவகாருண்ய ஒழுக்கத்திலும் பேரின்பம் பெற்ருர் பெருமையை விரிக்கும் இடத்தில் தெளிவாக வெளியிட்டருள்கின்ருர்கள்.

## மனித தேகம்

இம்மனித தேகமானது மாயையின் துணையால் சிருட்டிக்கப் பட்டபடியால், பசி, தாகம், பிணி, மூப்பு, நரை, மரணம், திரை முதலிய மாறுபாடுகளும், அழியும் தன்மையும் உடையதாக இருக்கின்றது.

## ஆண்டி அரசனானல்?

ஓர் விழல் வேய்ந்த குடிலில் வசிக்கும் ஏழைக் குடியானவன் புண்ணிய வசத்தாலும், அதிதீவிர முயற்சியாலும் செல்வம் தழைக்கலுறுகின்றான். அதனால் அந்தந்தக் காலங்களில் அவன் இயல்புக்கு ஏற்றவாறு குடிலை மாற்றுகின்றான். ஓடு வேய்ந்தக் கல் கட்டிடம் ஆக்குகின்றான். அதனினும் மிகு செல்வம் உண்டாயின், மூவடுக்கு மாளிகையாக ஓடு வேய்ந்த அந்த இல்லினை மாற்றி அமைத்துக் கொள்வான்.

உவமை அற்ற செல்வனாகவும், ஆட்சி புரியும் அரசனாகவும் அவன் நிலை மாறும்போது, எவராலும் எவ்வகையாலும் தனக்கு இடையூறு நேரிடா வண்ணம் தாண்டி வரமுடியாத அகழியாலும், ஏறி வரமுடியாத உயர்ந்த மதில்களாலும், வந்தாலும் தடுக்கத் தக்க ஆயுதங்களுடன் கூடிய காவல் படையும் உடைய அரண் சூழ்ந்த கூட கோபுரங்களுடன் எங்குள்ளதையும் கண்டு அறியக் கூடிய சாதனம் பொருத்தப் பட்டு சிகரம் எனத்திகழும் அரண்மனையில் வாழ்வான் என்பது யாவரும் உய்த்து உணரப்படும் விடயமாகும்.

## சரீர உயர்ச்சி

அதுபோலவே ஆன்மாக்கள் ஓர் அறிவுடைய நிலையில் புல் முதலிய அல்ப சரீரமும் அப்படியே ஈரறிவு முதல் ஐயறிவு உடைய ஜீவர்கள் ஈருகப் படிப்படியாக விசாலமும் விளக்கமும் பொருந்திய சரீர நிலைக்கு உயர்த்தப் படுகின்றன. பிறகு இம்மனித தேகம் ஆறறிவு விளங்கும் மூன்று அடுக்கு மாளிகையாக மாயைத் துணையுடன் பொருத்திக் கொடுக்கப் படுகின்றது, இஃது அணுபட்சத்தில் உலகம் படைத்தல் முதல் ஐந்தொழிலில் ஆக்கப்படுவதாகும்.

## ஞானசிருட்டி

ஆனல் ஆன்மாக்கள் ஞானம் படைத்தல் முதல் ஐந்தொழில் படுங்கால் முற்றிலும் மலத்தால் சூழப்பட்ட ஆன்மா

இருள் வடிவம் மாறி ஜீவன் ஆகுங்கால் மருள் வடிவும், ஜீவன் முத்தியில் பிரணவ வடிவும், பரம முத்தியில் அருள் வடிவும் பெற்று விளங்கும்.

## மேல்நிலை பெற்றதற்கு அடையாளம்

இதனைக் கன்னட தேசத்து அரசரான குமாரதேவர் இயற்றிய சுத்த சாதகம் தெரிவிக்கின்றது.

சொற்பனம் அதனில் கனவு இது என்றிடும் ஓர்
சொற்பன சாக்கிர நடுவே
நிற்பன போலும் மருள்; மருள் நடுவே நின்றிடும்
பிரணவ வடிவம்;
சிற்பர ஜீவன் முத்தன் அவ்வடிவாய்ச்
செகம் இதும் சிவம் அதும் தோன்ற
நிற்பன தனக்கு நிழல் இன்றி நிழல்போல்
நிலத்து அடி இன்றியே நிகழும்!

மண்ணினில் தடுக்க, சலத்தினில் நனைக்க,
வருங்கனலில் சுட, வளியால்
நண்ணிநின்று அசைக்க, வெளிஇடம் விடவே
நணுகிடாது என்று நின்று இலகும்;
புண்ணிய ஜீவன் முத்தர்தம் வடிவம்!
பொற்புற அவ்வடிவு கண்டளவே
விண்ணில் மண்ணினில் பாதலத்தில் உள்ளோர்
வியப்பொடு எழுந்து இறைஞ்சிடுவார்!

வினையினில் எடுத்த இவ்வுடல் மேலும்
வினை உளது எனில் இங்கே அகலும்;
வினை இலது எனில் இங்கு இவ்வுடல்தானே
வினை அறும்; ஓமயமாகி
வினைஉள உடல் போய் தோன்றல் மாத்திரமாய்
விளங்கியே வெந்துறு புரிபோல்
வினையிலாப் பரம முத்தியில் வெளியாய்
விமல நல் அருளதாய் விடுமே!

என்று இப்பாடல்கள் கூறியபடி ஆன்மாக்கள் மேல்நிலைக்கு ஏக ஏக அதற்கு ஏற்றவாறு அவர்கள் வடிவம் மாறுதல் அடைவதே உள்ளபடி மேல்நிலை ஏறியதற்கு அடையாளம்.

## பூர்வத்தில் பெறும் பேறு

பூர்வத்தில் சன்மார்க்க நெறியில் மேல் ஏறும் போது,

ஊனந் தங்கிய மாயை உடலினிடத்து இருந்தும்
ஊனம் இலாதிருக்கின்ற உளவு அருளிச்செய்தாய்
நான் அந்த உளவு கண்டு நடத்துகின்ற வகையும்
நல்லவனே நீ மகிழ்ந்து சொல்ல வருவாயே!

என்றவாறு இவ்வுடலில், தாமரை இலையில் ஜலம் போல் ஆன்மா பிரிவுபட்டு நிற்கும் நிலையடைந்து நிற்க வேண்டும்.

## சுத்ததேகம் பெறுமுன் நேரும் மாற்றம்

விரைந்து நின்அருளை ஈந்திடல் வேண்டும்;
விளம்பும் இத்தருணம் என் உளந்தான்
கரைந்தது; காதல் பெருகி மேல் பொங்கிக்
கரையெலாம் கடந்தது கண்டாய் !
வரைந்து எனை மணந்த வள்ளலே! எல்லாம்
வல்லவா! அம்பல வாணா!
திரைந்த என் உடம்பைத் திருஉடம்பு ஆக்கித்
திகழ்வித்த சித்தனே! சிவனே!

என்னும் பாடலில் குறிப்பிட்டபடிச் சரீரத்தில் நீங்கி நின்ற நிலையிலிருந்து அதன் பின் ஒருவாறு திரைந்த உடம்பு திருவுடம்பு ஆக்கப்படுவது சுத்த தேகம் ஆதற்குமுன் அடையவேண்டிய மாறுதல் என ஊகித்தறியவேண்டியுளது.

## முத்தேக சித்தி

அதன்பின்பே தோல், நரம்பு, என்பு, தசை, இரத்தம், சுக்கிலம் முதலிய அசுத்த பூத காரியங்களும், அவற்றின் காரணங்களாகிய அசுத்த பிரகிருதி அணுக்களுமாகிய தேகத்தை மாற்றி, மாற்று இவ்வளவு என்று அறியப்படாத சுத்த பூத காரிய சுத்த தேகம் ஆகிய பொன் வடிவத்தைப் பெறுதல் வேண்டும்.

அதன்பின் தோற்றுதல் மாத்திரமே அன்றி ஆகாயம் போல் பரிசிக்கப்படாத சுத்த பூதகாரண பிரணவ தேகத்தைப் பெறுதல் வேண்டும்.

முடிவில் தோன்றப் படுதலும் இன்றி ஆகாயம்போல் விளங்குகின்ற ஞானதேகத்தைப் பெறுதலும் வேண்டும்.

முடிந்த முடிபாகிய பரம முத்தியில் வெளியாய்- விமல நல் அருளதாய் விடுமே- என்று சுத்த சாதகம் கூறுவதால் நம்முடைய அசுத்த பூத காரிய தேகமாகிய நம் கண்ணுக்குத் தோற்றப்படாது மறையும் தன்மை உடையதாகிவிடும்.

## ஷடாந்த சமரச சுத்த சன்மார்க்கத்தின் முடிவு

சுத்த வடிவம், சுகவடிவாம் ஓங்கார
நித்த வடிவும், நிறைந்தோங்கு-- சித்துஎனும்ஓர்
ஞானவடிவும் இங்கு நான்பெற்றேன்;எங்கெங்கும்
தான விளையாட்டு இயற்றத்தான்.

என்றபடியால் ஒருங்கே சுத்த தேகம், பிரணவ தேகம், ஞான தேகம் என்னும் மூவகையான தேகத்தோடு நம்பெருமான் ஞானம் விளையும் விளையாட்டு இயற்றுதல் ஷடாந்த சமசர சுத்த சன்மார்க்கத்தின் முற்ற முடிந்த பேரனுபவமாகும்.

## மரணத்தை முற்றிலும் வெல்லுதல்

சாகாத கல்வியே கல்வி; ஒன்றே சிவம்தான்
　　என அறிந்த அறிவே
தகும் அறிவு; மலம் ஐந்தும் வென்ற வல்லமே
　　தனித்த பூரண வல்லபம்
வேகாத கால் ஆதி கண்டுகொண்டு எப்பொருளும்
　　விளைய விளைவித்த தொழிலே
மெய்த்தொழிலது ஆகும்; இந்நான்கையும்
　　ஒருங்கே வியந்து அடைந்து உலகம்எல்லாம்
மாகாதல் உற எல்லாம் வல்ல சித்தாகி
　　நிறைவான வரமே! இன்பமாம்
மன்னும் இதுநீ பெற்ற சுத்த சன்மார்க்கத்தின்
　　மரபு என்று உரைத்த குருவே!

என்றபடியால் சமரசசுத்த சன்மார்க்கத்தின் பூர்வத்தில் சரீரம் ஊனம் இலாது விளங்குவதும்;

　　இடையில் திருவுடம்பு எனக்குறிக்கப்பட்ட
　　ஒரு மாற்றத்தைப் பின் பெறுவதும்;

அதன்பின் ஆன்மா அடியன் ஆதல், பிள்ளை ஆதல் என்பது கடந்து சகமார்க்கத்தை எய்துவதும்;

　　ஆன்ம சிற்சத்தியாகித் தலைவனைப் புறத்து
　　அணைத்தவர் வடிவம் தானகி,

குருதுரியம் காண்கின்றேன்; சமரச சன்மார்க்கம்
கூடினேன்; பொதுவில் அருள் கூத்தாடும் கணவர்
மருவிடப் பெற்றவர் வடிவம் நான் ஆனேன்; களித்து
வாழ்கின்றேன்; எதிரற்ற வாழ்க்கையில் என்தோழி!
என்றபடி மரணத்தை முற்றிலும் வெல்லும் தாம் உறுவதும் சமரச சன்மார்க்க நிலையில்தான் கை கூடும். இதுவே உத்தரஞான விளக்கம் எனப்படுவதாகும்.

## சிவமாய் நிறைதல்

புறப்புணர்ச்சி என்கணவர் புரிந்த தருணந்தான்
புத்தமுதம் நானுண்டு பூரித்த தருணம் -என்றும்;
அகம்புணர்ந்தார் புறம்புணர்ந்தார் புறப்புணர்ச்சி
தருணம் தூய ஒளிபெற்று அழியாது ஓங்கு
வடிவானேன்;
அருளாம் அறிவாளர் புறப்புணர்ச்சி எனை அழியாது;
ஓங்க அருளியது ஈண்டு அகப்புணர்ச்சி அளவு
உரைக்கலாமே — என்றும்
குறிப்பிட்ட படியால் எல்லாம் வல்ல தலைவனை, தெருள் நிறைந்த பரிபூரண பக்குவ நிலை எய்தி ஆன்ம சிற்சத்தியாகிய தலைவி எல்லாம் வல்ல தலைவன்,

புறப்புணர்ச்சி தருணம் தான் பதிந்த
பொன்வடிவந்தனை அடைந்து களித்தேன்
என்றபடித் தனி உருவம் தழுவி அழியாது என்றும் விளங்கும் நிலையை எய்தி, பின் அகப்புணர்ச்சி புரியப்பெற்று சுத்த சிவ துரியாதீதத்தே சிவமாய் நிறைவதே ஷடாந்த சமரச சுத்த சன்மார்க்கத்தின் மரபு ஆகும்.

## சுத்த சிவ துரியாதீத நிலை

இதுவரை திருமூலர்-- மற்ற பெரியவர்களால் வெளிப் படுத்தப்பட்டதும் அனுபவிக்கப் பட்டதுமான துரிய நிலை அனுபவம் மூன்றே! அவை ஜீவ துரியம், பர துரியம், சிவ துரியம் அல்லது குருதுரியம் என்பவை ஆகும்.

நம் பெருமானல் குறிப்பிடப்படுவதோ
துரியத்தலம் மூன்றின், மேலே--சுத்த
துரியப் பதியில் அது அதனலே
தெரியத் தெரிவது பாரீர் -- திருச்
சிற்றம்பலத்தே திருநட ஜோதி

என்றபடியால்,

இதுவரை வெளிப்படுத்தப் படாததும் அனுபவிக்கப் படாததும் ஆகும். சுத்தசிவ சாக்கிரம், சுத்தசிவ சொற்பனம், சுத்தசிவ சுழுத்தி, சுத்தசிவ துரியம், சுத்தசிவ துரியாதீதம் என்னும் அனுபவ நிலைகளாகும். இவ்வைந்து நிலைகளையும் நம்பெருமான் அறிந்து அடைந்து அனுபவித் திட்டார்கள்.

**சாகா வரம் சித்திக்கப் பெற்றது**

நோவாதுநோன் பெனைப்போல் நோற்றவரும் எஞ்ஞான்றும்
சாவா வரம் எனைப்போல் சார்ந்தவரும் - தேவாநின்
பேரருளை என்போலப் பெற்றவரும் எவ்வுலகில்
யாருளர்நீ சற்றே அறை?

என்றும்;

செத்தார் எழுந்தனர்; சுத்த சன்மார்க்கம்
சிறந்தது; நான்
ஒத்தார் உயர்ந்தவர் இல்லா ஒருவனை
உற்று அடைந்தேன்;
சித்தாடு கின்றனன்; சாகா வரமும்
சிறக்கப்பெற்றேன்;
இத்தாரணியில் எனக்கு இணை யாரென்று
இயம்புவனே?

என்றும்;

பேராலும் அறிவாலும் பெரியர் எனச் சிறப்பாகப்
பேச நின்றோர்
ஆராலும் பெறல் அரியது யாது? அதனைப்
பெறுவித்தான்; அந்தோ! அந்தோ!

என்றும்;

ஊன் என்றும் உயிர் என்றும் குறியாமே முழுதும்
ஒருவடிவாம் திருவடிவம் உவந்தளித்த பதியே!

என்றும்;

தாம் பெற்ற நெடும் பேற்றின் பெருமையை, நாம் அறிந்து உய்ய வெளிப்படுத்தியுள்ளார்கள்.

இதனால் ''சித்தாடுகின்றனன், சாகா வரமும் சிறக்கப் பெற்றேன்'' என்றபடியால், இதுவரை யாரும் பெற்றிடாத சாகாவரம் சிறக்கப் பெற்றவர்கள் ஆனார்கள். அருள் விளை

யாட்டு இயற்றுகின்றவர்கள் ஆனார்கள்.

'ஊழி அன்றே' என்று உரைத்தருளினார்கள்.

'சாகா வரமும் உவந்தளித்தாய்' என்று ஓதியருளிய படியாலும், நம்பெருமான் சாகாவரம் யாவரினும் சிறக்கப் பெற்று விளங்கினார்கள்.

## சிவமயம்

இணைசொலா இன்புற்ற நிலையும், நோவாத நோன்பு என்ற ஒப்பற்ற பெருந்தயவால்உயிர்க்கிரங்கி உபகரித்தலும்; எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணி உள்ளே ஒத்துரிமை உடையவராய் உவத்தலும்; எவ்வுயிரும் தம்முயிர்போல் கண்டு ஞானத் தெருள்நெறியில் சுத்தசிவ சன்மார்க்கப் பெருநீதி செலுத்தலும் ஆகிய உண்மை இரக்க மும், உண்மை அன்பும், நோன்பாக நோற்று இதுவரை சாத்திரங்களால் குறிக்கப்படாததும் அனுபவிக்கப்படாதது மாகியசுத்தசிவதுரிய அதீதமேல்நிலையில்அமர்ந்துசுத்தசிவமய மாய் நிறைந்து, வள்ளல் விளங்குகின்றார்கள் எனல்சத்தியம்.

## ஒப்பும் உயர்வும் அற்ற பேறு

பேறடைவில் குறிப்பிட்டபடி அருள்ஒளித் திருவை சர்வ சுதந்தரத்துடன் திருமணம் புரிந்தார்கள்! எல்லாம் வல்ல தலைவருக்கு அருட்செங்கோல் செலுத்தும் செல்வப் பிள்ளையானார்கள்;

தன்னையும் தன்னருள் சத்தியின் வடிவையும்
என்னையும் ஒன்றென இயற்றிய தந்தையே!

என்றபடி அம்மை, அப்பன், அருட்பிரகாச வள்ளல் என்னும் மூவடிவும் ஒன்றாகி விளங்குகின்றார்கள்.

உலகம்படைத்தல் முதல் ஐந்தொழிலும்தம்திருக்கடைக்க ணிப்பில் சத்திகளும், சத்தர்களும், ஐந்தொழில் கர்த்தர்களும், மூர்த்திகளும் தம் ஏவலைப்புரிய தாம் பரிபூரணத் திருவருள் சுதந்தரத்தை தமக்கே உரியதாக செலுத்திவருகின்றார்கள். அச்சுதந்தரத்தை இறைவன் தமக்கே உரியதாகவைத்துக் கொள்ளாது,

எல்லாம் வல்ல சித்தெனக்கு அளித்து எனக்குனை
அல்லாது இலையெனும் அருட்பெருஞ் ஜோதி !

என்றபடி பூரணமாகத் தரத் தாம் கலந்து ஒப்பும் உயர்வும்

அற்று விளங்குகின்றார்கள் நம்பெருமான் !

**ஆதலால்,**

இத்தாரணியில் எனக்குஆர் இணைஎன்றியம்புவனே?
என்றும்;
நின்பேரருளை என்போலப் பெற்றவரும் எவ்வுலகில்
யாருளர்நீ சற்றே அறை?
என்றும்;
அவர்கள் பெற்ற பெரும்பேற்றை திருவாய் மலர்ந்தருள்கின்றார்கள். அதனைச் சாதாரண தரத்தினர் அறிந்து கொள்ளுதல் அருமை ஆதல் ப ற் றி யே, அருட்பாவில் பல இடங்களிலும் வெளிப்படுத்துகின்றார்கள்.

## ஆண்டவர் அறிவார்

மேலும்,
சந்நிதியில் சென்று நான்பெற்ற பேறது
சாமி அறிவாரடி!
என்றதால், அருட்பிரகாச வள்ளல் பெற்றது அந்த ஒப்பற்றவராகிய ஆண்டவரையே! ஆதலால் அதுவாம் பேற்றை அப்பேருக விளங்கிடும் ஆண்டவரே அறிவார் என்றார்கள்.

## கீழ்ப்படிகளில் இல்லை

இப்படிக் கடவுளே தானாகி விளங்கும் ஐக்கியம் கீழ்ப்படிகளில் எவ்வகையிலும் இன்று; ஆகலில் மற்றெல்லாவற்றையும் பூர்வநிலையாக்கியே பேசினார்கள்.

## இவனே அவன்

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரும் அருட்பிரகாச வள்ளலும் ஒன்றாகி விளங்கும் தன்மையை மெய்யன்பர்கள் எல்லாம் தாம்பிரித்து உணராத நிலையில், தெய்வ வழிபாடும் வள்ளல் வழிபாடும் ஒன்றுபட்டு மிளிர்ந்து வருவது கண்கூடாகும்.

இதனை நம்பெருமானே,

தவநேயமும் சுத்த சன்மார்க்க நேயமும் சத்தியமாம்
சிவநேயமும் தந்துஎன் உள்ளம் தெளிய
தெளித்தனையே!
நவநேயமன்றில் அருட்பெருஞ்ஜோதியை நாடிநின்ற
இவனே அவனெனக் கொள்வா ரென்னன்பர்
இருநிலத்தே!

என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

## காலம் உள்ள போதே...

ஆகலின் கடவுளை அறிவால் அறிந்து அம்மயமாய் காலத்தாலும், இடத்தாலும், விதத்தாலும், அளவாலும், தடைபடாமல் வாழ்ந்து யாவும் தாமாக விளங்குதல் காலம் உள்ள போதே அடையப்பெறும் பேறு ஆகும்எனஉணர்ந்திடுவோம்.

## வெளியாய் மறையும்

உலகு கண்டிடவே தோன்ற நின்ற வடிவம் அருள் மயமாய், வெளியாய் மறையும் என்பதும் அறிந்திடுவோம்.

நிழல் சாயை அற்று, பசி, மூப்பு, மரணம் அற்று ஏககாலத்தில் பல இடங்களில் உலாவவும், எல்லாவற்றையும் உணரவும், எல்லாம் செய்யவும் வல்ல நிலையில்;

ஊன்என்றும் உயிர்என்றும் குறியாமே முழுதும்
ஒருவடிவாம் திருவடிவம் உவந்தளித்த பதியே!

என்றபடி, உயிரும் சரீரமும் பிரித்து அறியாத ஞான சொரூபத்துடன் விளங்கியவர்கள் நம்பெருமான்.

## தன் நிலையில் தான் அமர்ந்து பெற்ற பேறு

மற்ற பெரியார்கள் போல்இலிங்கத்தில், ஜோதியில், அம்பலத்தில் சென்று மறைந்தார்கள் என்று குறிப்பிடக்கிட்டாதபடித் தம்நிலையில் தாமாக அமர்ந்து, பின் நம் ஊனக் கண்ணுக்குத் தோன்ருது மறைந்து ஆண்டவன் தாமாக எங்கும் நிறைந்துஎவ்வுயிர்க்கும்உயிராகநம்பெருமான் விளங்கிஅருள் நடம் புரிகின்ருர்கள்.

இது சுத்த சித்தாந்த ரீதியாக வெளிப்படுத்தப்பட்ட சுத்த சாதகம் முதலிய சாத்திரங்களால் ஒருவாறும்;

வள்ளல் பெருமான் அருளிய பாடல்களாலும்;

ஜீவகாருண்ய ஒழுக்கம், சத்தியஞான விண்ணப்பம், பலபடவிளக்கியருளிய விவகாரக் குறிப்புகளாலும்;

நேரில் அவர்கள் தோன்ற விளங்கி நின்ற காலத்தில் மெய்யன்பர்கள் கண்ட காட்சிகளாலும்;

நிழல் அற்று, போட்டோ படத்தில் பதிவுருது, இருந்த தன்மையாலும்;

தோன்றாத் துணையாய் இருந்துகொண்டு, சுத்ததேகத்துடன் பரிசிப்பதாக உள்ள நிலையில் அன்பர்கட்குவெளிப்பட்டு அநேகத் திருவிளையாடல்கள் புரிந்திருக்கும் உண்மைகளாலும் தோன்றல் மாத்திரமாக விளங்கி அறிவுறுத்தல், உபகரித்தல் முதலிய நிகழ்ச்சிகளாலும்; அன்பர்களின் பரிபாக நிமித்தம் உள்முகத்து உற்று அருள் கண்ணுக்கு அளித்து, ஞான தீட்சை புரிந்தருளும் ஆற்றலாலும்;

திருவருட்பிரகாச வள்ளற்பெருமான் எவ்வுலகும் சன் மார்க்கப் பெரும்பயன் அடையும் பொருட்டே அருள்வடிவில் திகழ்கின்றார்கள்; அருள் விளையாட்டு இயற்றி அருள்கின்றார் கள் என்பது சத்தியம்! சத்தியம்!! சத்தியம்!!!

## அடிபரவி உய்ந்திடுவோம்

இதனை,

தானே தயவால் சிறியேற்குத்
தனித்த ஞான அறிவளித்த
தாயே! எல்லாச் சுதந்தரமும்
தந்த கருணை எந்தாயே!

ஊனே விளங்க ஊனம்இலா
ஒலிபெற்று எல்லா உலகமும்என்
உடைமையாக் கொண்டு அருள்நிலைமேல்
உற்றேன்; உன்றன் அருளாலே.

வானே மதிக்கச் சாகாதவானாய் எல்லாம்
வல்ல சித்தே வயங்க
உனைஉள் கலந்து கொண்டேன்;
வகுக்கும் தொழிலே முதல்ஐந்தும்

நானே புரிகின்றேன்; புரிதல்
நானோ? நீயோ? நான் அறியேன்;
நடம்செய் கருணை நாயகனே!

என்பதனால் நம்பெருமான் எந்நிலையில் எப்படி விளங்கி அருள் கின்றார்கள் என்பதை உணர்ந்து, அருள்நெறி நின்று, அவர் களின் அடிபரவி, ஆனந்தம் எய்தி உய்ந்திடுவோமாக!

**வாழிய ! வாழிய !!**

வாழி அருட்பிரகாச
வள்ளல் அடிமலர்கள்!
வளமிகு பேரொளி திகழ
வயங்கி எமது உளத்தே;

சூழ்உலகம் முழுதும்
அருள்நெறி பரவ அவர்சொல்
சுருதிமுடிவு அறிவரிய
அருள்அமுத மொழிகள்

வாழி! அவரவர்
பருவநிலை ஒளிரஅருளி
வடல்உறு சிற்றம்பலத்தே
வாழிஅருள் நடனம்!

வாழிஅடியவர் பலரும்
இகபரத்தே மயங்கா
வண்மையுற நின்று
உயிர்கட்கு இரங்கி உபகரித்தே.

திருச்சிற்றம்பலம்






# சிதம்பர சுவாமிகளின் வாழ்க்கைக் குறிப்புகள்

பெயர்: சிதம்பர சுவாமிகள்

பிறப்பு: விஜய - ஐப்பசி 25(13-11-1895)

பிறந்த இடம்: பிறையாறு - தஞ்சை மாவட்டம்

பெற்ரோர்: துரைசாமி - அமிர்தம் அம்மையார்

உறைந்த இடங்கள்: கிடங்கல், மேட்டுக்குப்பம்

செய்த பணி: உயிர்க்கொலையற்ற தமிழ்மருத்துவம்

மறைவு: இராட்சச ஆடி 30(15-8-1975)கேட்டை

கல்லறை: நடராசப் பிள்ளை சாவடி (தஞ்சை மா.)

## நூலாசிரியர்



நம் வள்ளற்பெருமானின் முதல் மாணாக்கர் தொழுவூரார்; இரண்டாம் மாணாக்கர் காரணப்பட்டார். அக் காரணப்பட்டாரோடும் - பெருமான் காலத்துப் பெரியவர்களோடும் - தொழுவூரார் திருமகனேடும் பணிவும், தொண்டும், பழக்கமும் பூண்டு நின்றவர்கள் சிதம்பர சுவாமிகள். அறுபது வருட காலமாகத் திருவருட்பாவை ஆய்ந்துணர்ந்தவர்கள்; ஆழ்ந்து தோய்ந்தவர்கள்; சன்மார்க்கப் பெருநெறிக்குக் கலங்கரை விளக்கமாகத் திகழ்ந்தவர்கள்; பெருமானின் இயற்கை உண்மைப் பெருநிறைவை உள்ளபடியே உணர்ந்தவர்கள்; பட்டறிவும் மிக்கவர்கள்; பலரை ஜீவகாருண்யப் பெருநெறிக்கு ஆட்படுத்தியவர்கள்!

அவர்களே நம் பெருமானின் திவ்ய சரித்திரத்தை அகச் சான்றுகளுடன் விளக்கித் திறனாய்வு முறையில் எழுதியவர்கள்.